[31st January 1961

Sri T. SAMPATH : May I know, Sir, whether there is any proposal for the expansion of the scheme?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The colony is not yet complete. Along the colony there is a Dairy Project, which is under construction. I cannot say whether there is any proposal for expansion.

*Dry cattle*

* 312 *Q.*—Sri K. VINAYAKAM (on behalf of Sri S. M. ANNAMALAI) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 22-ம் தேதியில் 362 எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி பால் வற்றிய மாடுகள் பராமரிப்புக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள கூட்டுறவு சங்கங்கள் எங்கெங்கே உள்ளன ?

(இ) வடாற்காடு மாவட்டத்தில் ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (அ) The co-operative societies established for the salvage of dry cattle are located at—

(1) Abhishekapatti in Tirunelveli district;

(2) Thuvakudy in Tiruchirappalli district;

(3) Veerapondi in Coimbatore district;

(4) Virudhunagar in Ramanathapuram district;

(5) Alamadi in Chingleput district; and

(6) Vattambedu in Nellore district.

(இ) No, Sir.

Sri A. VEDARATHNAM : இவ்விதம் பால் வற்றி மரத்துப் போன மாடுகளுக்கு சென்னையில் பிஞ்சிராப்போல் என்பதை ஏற்படுத்தி நடத்தப்பட்டு வருகிறதல்லவா ? அதன் மூலமாக வியர்த்தமாகும் தோல் எலும்பு போன்றவைகளை பாதுகாக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி இப்போது என்னிடம் தகவல் இல்லை. தனிக்கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

*Dental clinics*

* 313 *Q.*—Sri T. S. RAMASWAMI (on behalf of Sri K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number and places where Dental clinics have been established in 1959 and 1960 so far; and

(*b*) the nature of aid given to them by the Central Government?

31st January 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) During 1959 and 1960 nine Dental Clinics have been opened in the District Headquarters Hospitals at Vellore, Cuddalore, Coimbatore, Ramanathapuram, Salem, Thanjavur, Tiruchirappalli, Chingleput and Nagercoil.

(b) The scheme for the establishment of Dental Clinics is eligible for Central assistance at fifty per cent of the recurring expenditure and seventy-five per cent of the non-recurring expenditure on equipment alone.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், கிராமங்களுக்குச் சென்று பல் வைத்திய சிகிச்சை செய்ய வாகனங்கள் மூலம் நடத்தப்பட்டு வந்தது, இப்போது நல்லமுறையில் நடைபெற்று வருகிறதா? இதை எல்லாம் கிராமங்களுக்கும் விஸ்தரிப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது நன்றாகத்தான் நடந்து வருகிறது. ஆனால் இதற்காக இருக்கின்ற வாகனத்திற்கு அடிக்கடி கோளாறு ஏற்பட்டு விடுகிறது. அந்த வாகனம் ஒரு பிரமாண்டமானது. அது ஒரு தேசத்திலிருந்து நமக்கு நன்கொடையாகக் கிடைத்தது. இதைததவிர வேறு எல்லாம் சரியாக நடைபெற்றுக்கொண்டுதான வருகிறது.

*Handloom goods*

* 314 Q.—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் ஸாண்போரைஸ்டு கைத்தறித் துணி உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா? எங்கே? எப்போது?

(இ) இதன் மூலம் எதிர்ப்பார்க்கப்படும் அனுகூலங்கள் என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The Madras State Handloom Society has proposed to instal one EVASET processing plant to secure similar results as under " Sanforisation ". The matter is being pursued.

(இ) The quality and finish of handloom goods can be improved by the use of this process.

SRI A. VEDARATHNAM : இந்த ரகத் துணிகளுக்கு வெளி நாட்டில் நல்ல கிராக்கி இருக்கிறது அல்லவா? அப்படியிருக்குமானால் அதை அபிவிருத்தி செய்வதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்திருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ரகத் துணிகளுக்கு உள்நாட்டிலேயே நல்ல கிராக்கி இருக்கிறது. அதற்காக ஒரு பிராஸஸிங் மிஷின் வைக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். இதன் மூலம் எப்படி வேலை செய்வது, இதன் மூலம் அபிவிருத்தி செய்யப்பட்ட துணிகள் எப்படியிருக்கிறது என்பதைப்பற்றியும் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறோம்.

[31st January 1961]

SRI K. VINAYAKAM : Sir, may I know whether this process is applied by the private sector?

THE HON. SRI R. VENKATARAMAN : By the co-operative sector.

*Vaigai Project*

* 315 Q.—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI N. R. THIAGARAJAN): கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா வைகை அணைக்கட்டில் உள்ள கட்டிடங்களை யாவும் இடித்துத்தள்ளப்போவது உண்மையா?

(இ) வேறு வழியில் அந்தக் கட்டிடங்களை உபயோகிக்க முடியாதா?

THE HON. SRI P. KAKKAN : (அ) & (இ) No, Sir. Only such of those temporary buildings constructed with cheap materials for the execution of the project, as were found uneconomical and unsafe and cannot be retained for any other use, are dismantled. The remaining buildings are put to the best use possible.

*Well subsidy scheme*

* 316 Q.—SRI K. VINAYAKAM (on behalf of SRI S. M. ANNAMALAI) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கடன் மான்யத் திட்டத்தின்கீழ் கிணறுகள் வெட்டுவதற்கு சமுதாய நலத் திட்டப் பகுதிகள் அல்லாத இடங்களுக்குத் தான் பணம் தரப்படுகிறது என்பது உண்மையா?

(இ) அப்படியாயின், அதற்கான காரணங்கள் யாவை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) & (இ) The intention is that the scheme should be implemented mainly in the non-block areas, but the funds available under the scheme will also be utilised by the Block Development Officers after they have exhausted the provision under "Irrigation and Reclamation" in the Block Budget. When this provision is exhausted, the Block Development Officers will forward the pending applications to the Tahsildar concerned with a certificate that the allotment in the Block budget for the purpose has been exhausted. These applications will then be dealt with as under the New Well Subsidy Scheme.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், இனும் கிராமங்களில் இந்த மாதிரி கிணறுகள் வெட்டுவதற்கு லோன கொடுக்க முடியாது என்று மறுக்கிறார்கள். ரீ செட்டில்மென்ட் முடிந்த இடத்திலாவது இம்மாதிரியான லோன் கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா? அல்லது உடனடியாக தற்காலிகமாக பட்டா கொடுப்பதற்காகவாவது அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.

31st January 1961]

### *Drugs*

* 317 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மருந்துகளின் தரத்தைக் கட்டுப்படுத்த அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா ?

(இ) அப்படியானல் ஆங்கில இந்திய வைத்திய முறைகளில் எந்த முறைக்கு என்ன கட்டுப்பாடு அனுஷ்டிக்கப்படுகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) The provisions of the Drugs Act, 1940, and Drugs Rules, 1945, are being enforced in this State with effect from 1st April 1947 to control the Standards of Drugs.

(இ) All drugs other than those exclusively used or prepared for use in accordance with the Ayurvedic or Unani systems of medicine, come within the purview of the Drugs Act and Rules thereunder, as per the definition of the term "Drug" laid down in section 3 (*b*) of the Drugs Act.

SRI A. VEDARATHNAM : இந்த மருந்துகளில், ஸ்டான்டர்ட் மெடிசின் பாட்டில்களில் போலி மருந்துகளை அடைத்து விற்பனை செய்யப்பட்டு வருகிறது அரசாங்கத்திற்கு தெரியுமா ? அதைத் தடுப்பதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்திருக்கின்றது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : டிரக்ஸ் ஆக்ட் பிரகாரம் போலி மருந்தைத் தடுப்பதற்கு பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. பிராசிக்யூஷனும் செய்யப்படுகிறது. வாட்டர்பரீஸ் காம்பௌண்ட் மருந்து பாட்டிலில் போலி மருந்துகளை நிரப்பி உண்மையான மருந்து என்று விற்கிறார்கள். இதை தடுப்பதற்கு சமீபத்தில் கூடிய ஹெல்த் மினிஸ்டர்ஸ் கான்பிரன்ஸில் ஒரு தீர்மானம் போட்டார்கள், அதை வாசிக்கலாம் என்று எண்ணுகிறேன்.

"The Central Council of Health having given careful thought to the present position with regard to the manufacture of all types of medicines, is unanimously of the opinion that time has arrived for measures being taken for the regulation and control of the manufacture, distribution and sale of all kinds of drugs including ayurvedic, unani, homoeopathic, etc."

இதில் மூன்று ஆயுர்வேத மருந்துகளும் சேரவில்லை. அதையும் உட்படுத்துவதற்கு நாம் சிபார்சு செய்திருக்கிறோம். இந்தியா கவர்ன்மென்ட்டும் அதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், கிராமங்களில் பூச்சிகளை கொல்லுவதற்கு மருந்து கொடுக்கிறார்கள். இந்த மருந்தின் காரணமாக சில வேளைகளில் மனிதர்களும் இறந்து போகிறார்கள்.

ஆகவே இந்தமாதிரியான மருந்துகளை விநியோகம் செய்யும் போது, ஜாக்கிரதையாக உபயோகிக்கும்படி சிப்பந்திகளுக்கு உத்தரவு கொடுக்க அரசாங்கம் முன் வருமா? இப்பேற்பட்ட பவர் உள்ள மருந்துகளை கொடுப்பதற்கு பதிலாக வேறு மருந்துகளை கொடுக்க சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா?

MR. SPEAKER: இதற்கும் மூலக்கேள்விக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU: மனிதர்களுக்கு கொடுக்கக்கூடிய மருந்துதான் என் பொறுப்பில் இருக்கிறது. மாட்டு மருந்து, பூச்சி மருந்து எல்லாம் என் சக அமைச்சர் அவர்களின் பொறுப்பில் இருக்கிறது. அதை அவர்கள் கவனித்துக் கொள்வார்கள்.

SRI K. B. S. MANI: மெடிசன், டிரக்ஸ் இவைகளுக்கான லைசென்ஸ் கொடுப்பது நமது சர்க்காரின் மேற்பார்வையிலிருக்கிறதா அல்லது மத்திய சர்க்காரின் மேற்பார்வையிலிருக்கிறதா? நமது சர்க்காரின் மேற்பார்வையிலிருக்கிறது என்றால், அல்கஹால், ஜிஞ்சர்பெரிஸ் போன்றவைகளுக்கு அனுமதி கொடுக்காமல், நல்லமுறையில் மதுவிலக்கு சட்ட விதிகளை அமலாக்குவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதற்கான லைசென்ஸ் கொடுப்பது நம்முடைய சர்க்காரின்கீழ்தான் இருக்கிறது. மதுவிலக்கில் சேர்ந்திருக்கிறதா என்பது ஆலோசனை செய்ய வேண்டிய விஷயம். அது வேறு அமைச்சரைச் சேர்ந்தது. மருந்துகளில் சேர்க்கக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இருந்தும் மறைமுகமாக சிலர் சேர்த்து வருகிறார்கள். அதற்கு அவ்வப்போது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

### *Small-scale Industries*

*** 318 *Q.*—SRI K. VINAYAKAM (on behalf of SRI S. M. ANNAMALAI):** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 12-ம் தேதியில் 121-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி வடாற்காடு மாவட்டத்தில் சிறு கைத்தொழில்கள் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கலாமென்று சமுதாய நல திட்ட அதிகாரிகளை கேட்கப்பட்டுள்ளதா?

(இ) அப்படியானால், அவர்களின் பதில்கள் வந்துவிட்டனவா?

(உ) அவைகளின் விவரமென்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) & (இ) The field investigations in connection with the economic survey of Small-Scale Industries in the North Arcot district were undertaken by the Officers of the Small-Scale Industries Service Institute of the Government of India at Madras and they have reported that during the course of the survey, the Block Development Officers and Extension Officers (Industries) were informally consulted on the scope for the development of industries.

(உ) As they were personally consulted, no written statements were obtained from them.

*Spinning Mills*

MR. SPEAKER : Question No. 319.

SRI K. VINAYAKAM : (Slowly rising from his seat.) I put the question, Sir.

MR. SPEAKER : I think the hon. Member got tired of sponsoring absentee-Members' questions (Laughter).

* 319 *Q.*—SRI K. VINAYAKAM (on behalf of SRI N. R. THIAGARAJAN) : *கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) நமது ராஜ்யத்தில் புதிதாக நூற்கும் மில்கள் துவக்க இந்த ஆண்டு எத்தனை பேருக்கு அனுமதி கொடுக்கப்பட்டது ?*

*(இ) இதில் கூட்டுறவு மில்கள் எத்தனை ?*

*(உ) மதுரை ஜில்லா தேனியில் ஒரு கூட்டுறவு நூற்பு மில் வைக்க அனுமதி கொடுக்கப்படுமா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Licences have been granted by the Government of India to six applicants during this year.

(இ) One.

(உ) The matter will be considered on merits if suitable proposals are received.

SRI SOWDI S. SUNDARA BHARATHI : Is there any proposal to start a Cotton Spinning Mill in Aruppukkottai? If so, may I know the stage at which the matter stands and whether licence has been granted to anyone for the purpose and also whether any site has been located?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, a mill has been licensed to a private party in Aruppukkottai, East Ramanathapuram district. It will be a 12,000 spindles mill.

SRI K. VINAYAKAM : Was any request made from Theni regarding the issue of a licence for locating this mill and what are the six places where these mills are to be located?

[31st January 1961

THE HON. SRI R. VENKATARAMAN : This question relates to 1960 and it does not include some of the licences obtained in 1961. So far as 1960 is concerned, the licences have been granted to the following places :—

| | | |
|---|---|---|
| 1 | Nanguneri (Tirunelveli district) ... | 25,000 spindles. |
| 2 | Aruppukottai (East Ramanathapuram district) ... ... ... ... ... | 12,000 spindles. |
| 3 | Manamadurai (East Ramanathapuram district) ... ... ... ... ... | 12,000 spindles. |
| 4 | Paramakudi (East Ramanathapuram district) ... ... ... ... ... | 12,000 spindles. |
| 5 | Bodinayakanur (Madurai district) ... (This will include Theni. Bodinayakanur and Theni go together.) | 12,000 spindles. |
| 6 | Salem ... ... ... ... ... | 12,000 spindles. |

9-30 a.m. SRI R. KRISHNASAMI NAIDU : சார், இந்த மில்களில் ஸ்டேபிள் ஃபைபர் தயாரிக்கும் மில்களுக்கும் லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருக்கிறதா? எதிர்காலத்தில் லைசென்ஸ் கொடுக்கும் உத்தேசம் உண்டா? அரசாங்கம் அதை ஆதரிக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : இவைகளெல்லாம் காட்டன் ஸ்பின்னிங் மில்லைப்பற்றியது. ஸ்டேபிள் ஃபைபரைப் பற்றி தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன். லைசென்ஸ் கொடுப்பது நம் கையில் இல்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Diesel oil*

* 320 Q.—SRI K. VINAYAKAM (on behalf of SRI S. M. ANNAMALAI): கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விவசாயத்திற்கு உபயோகப்படுத்தப்படும் டீசல் எண்ணெய் மீதுள்ள விற்பனை வரியை எடுத்துவிடவேண்டுமென்று திட்டக் கமிஷன் ஆலோசனை கூறியுள்ளதா?

(இ) அப்படியானால் மாநில சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI K. VINAYAKAM : May I know the approximate revenue collected under sales tax on the sale of diesel oil used for agricultural purposes only?

THE HON. SRI R. VENKATARAMAN : It is impossible to gather particulars of the sales tax collected on the sale of diesel oil to be used for agricultural purpose only. We have figures relating to the collection of sales tax in respect of the sale of diesel oil generally.

SRI S. LAZAR : பிளானிங் கமிஷன் இது சம்பந்தமாக ஆலோசனை சொல்லவில்லை என்று சொன்னபோதிலும் நமது சர்க்கார் விவசாயத்திற்கு உபயோகிக்கக்கூடிய டீசல் ஆயிலுக்கு சப்ஸிடி அல்லது வேறு முறையில் ஊக்கம் அளிப்பதாக உறுதி கொடுத்ததே, அது என்ன ஆயிற்று ?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் இதைப் பரிசீலனை செய்வதாக உறுதி கொடுத்தது. அந்த முறையில் தீவிர மாகப் பரிசீலனை செய்தது. இதில் ஏதாவது நிவாரணம் கொடுக்க ஆரம்பித்தால் நிர்வாகத்தில் தொல்லை தொந்திரவுகளும், மேற் கொண்டு வரியை ஏமாற்றுகிற வழிகளும் அதிகரித்து விடும். ஏனென்றால், டீஸல் எண்ணெயை வாங்கி விவசாயத்திற்கு உபயோகப்படுத்துகிறார்களா அல்லது மோட்டாருக்குப் போடு கிறார்களா என்று கண்டுபிடிப்பது கஷ்டமானது. இருக்கக்கூடிய தொல்லை தொந்தரவுகளைப் பார்த்து நிவாரணம் அளிக்க முடிய வில்லை என்ற முடிவுக்கு அரசாங்கம் வந்திருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—AN ASTERISK (*) AT THE COMMENCEMENT OF A SPEECH INDICATES REVISION BY THE MEMBER.]

## II.—ANNOUNCEMENTS.

### (1) MESSAGE FROM THE GOVERNOR.

MR. SPEAKER : I have received a message from His Excellency the Governor which reads as follows :—

'Dear Mr. Speaker,

I have received with great satisfaction your resolution of thanks for the address with which I opened the present session of the Legislature . . . .'

## III.—CALLING ATTENTION TO THE CLOSURE OF DRAINAGE CHANNELS BY THE DHRANGADHRA CHEMICAL WORKS, SAHUPURAM.

SRI M. S. SELVARAJAN : Mr. Speaker, Sir, I wish to call the attention of the Hon. Minister for Revenue under rule 41 of the Assembly Rules to an urgent matter of public importance, viz., the damages caused and likely to be caused to thousands of acres of nanja lands under Authoor tank in Tiruchendur taluk in consequence of the closure of many drainage channels by the Dhrangadhra Chemical Works, Limited, Sahupuram, and storing of sea-water close to the nanja lands for salt production. I request the Hon. Minister to make a statement on the matter

* THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Speaker, Sir, the Government have verified from the local officers whether extensive areas of wet lands under Authoor tank in Tiruchendur taluk, Tirunelveli district, have been adversely affected consequent on the closure of many drainage channels by Dhrangadhra Chemical Works, Limited, Sahupuram, and the storing of sea-water close to the wet lands for salt production.

The Authoor tank in Tiruchendur taluk, Tirunelveli district, is a major source with an extensive ayacut of 2,200 acres spread over five revenue villages (viz.), Kayalpatnam North, Authoor cusba, Mela Authoor, Senthamangalam and Suganthalai villages. An extent of 1610·80 acres of dry and wet lands in Punnakayal, Senthamangalam, Authoor cusba and Kayalpatnam North villages has been acquired for the establishment of the Dhrangadhra Chemical Works, Limited, Bombay, for the manufacture of caustic soda and its by-product chlorine. The plant is the largest and most modern in Asia and the present rated capacity of the plant is 30,000 tons of caustic soda per annum and a further increase to 55,000 tons is under contemplation. Chlorine is a by-product and the output is 28,000 tons at present. One of the most important raw materials required is salt and vast extents of lands acquired are intended mainly for the laying out of salt pans.

The lands acquired for the Company for the laying out of salt pans and for the factory quarters, etc., adjoin wet fields in Authoor cusba, Senthamangalam and Kayalpatnam North villages and so naturally some of the drainage channels pass through these lands.

The extent of wet lands under the Authoor tank in Authoor Cusba village is 1,250 acres. One of the drainage channels in this area passes through the lands acquired for the company and the company has not obstructed the flow of water in the channel in any manner.

The extent of wet lands under the tank in Senthamangalam village is 881·00 acres. The field drainage of all the wet lands in this village is carried through a drainage channel in the lands acquired for the company and the company has not obstructed the flow of water in this channel. There is also no damage to standing paddy crops.

The extent of wet lands under the tank in Kayalpatnam North village is only 37·14 acres. The only drainage channel for these lands is in the patta land acquired by the company and the company has not obstructed the channel or in any way interfered with the course of the channel.

Due to abnormally heavy rains in the recent months in this area there was stagnation of 3 to 6 inches of water in some small extents of wet lands in these three villages. The local officers after inspection on 18th January 1961 and after conducting local enquiry have reported that there is no damage to standing crops. The allegation that the stagnation was due to the obstruction caused by the Dhrangadhra Company is therefore not borne out by facts as it was due to the unprecedented rains in November last. As a matter of fact even during the third week of this month there was a heavy rainfall of seven inches.

### IV.—POINT OF INFORMATION *RE*: ABSENCE OF OPPOSITION MEMBERS.

SRI T. SAMPATH : இன்றைய கூட்டத்தில் எதிர்க்கட்சிகளும், எதிர்க்கட்சித் தலைவர்களும் கலந்து கொள்ளவில்லை. அதற்குக் காரணம் என்ன என்று கேட்க விரும்புகிறேன். பேப்பரில் பல ஸ்டேட்மெண்டுகள் வந்திருக்கின்றன. அவைகள் உண்மைதானா என்று கேட்க விரும்புகிறேன்.

MR. SPEAKER : யாரைக் கேட்கிறீர்கள் ?

SRI T. SAMPATH : "லீடர் ஆப் தி ஹவுஸ்" ஐக் கேட்கிறேன்.

MR. SPEAKER: அவர் எப்படிப் பதில் சொல்ல முடியும் ?

### V.—STATEMENT BY THE HON. MINISTER FOR INDUSTRIES.

* THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir. With deep regret I wish to inform the House about the unfortunate bus accident that occurred on 23rd January 1961 at about 17-00 hours on route No. 51-A (Broadway-Padappai) in between mile stones 3/0 and 3/1 at Muduchoor. When fleet No. 868 of the Madras State Transport Department was nearing Tambaram, the driver saw three children crossing the road. To avoid the children, the driver of the bus swerved to his right and got on to the lake bund to a height of about four feet but could not swerve back to left, as a result of which the bus capsized. The conductor Sri Munuswamy, on duty, aged about 21 years was caught in between the bus and the ground and lost his life on the spot.

Six passengers were injured out of which one succumbed to the injuries in the General Hospital, late in the night.

The bus was severely damaged. The Traffic Superintendent (Movements) of the Madras State Transport Department is investigating into the accident.

On behalf of the Government and on my own behalf, I convey our deep sympathies to the relatives of the victims.

### II. ANNOUNCEMENTS—*cont.*

(2) THE MADRAS APPROPRIATION BILL, 1961 (L.A. BILL NO. 6 OF 1961).

MR. SPEAKER : I have to announce to the House that the Madras Appropriation Bill, 1961 (L.A. Bill No. 6 of 1961) has been passed by the Madras Legislative Council without any recommendation.

### VI. GOVERNMENT BILL.

THE MADRAS CHIT FUNDS BILL, 1960 (L.A. BILL NO. 5 OF 1960).

MR. SPEAKER : Now we take up Government Bills. We shall take up the Madras Chit Funds Bill, 1960.

SRI A. VEDARATHNAM : On a point of Order, Sir. எதிர்க்கட்சித் தலைவர்களோ அல்லது எதிர்க் கட்சி மெம்பர்களோ யாரும் இல்லாமல் சபையின் கூட்டத்தை நடத்துவது முறைதானா என்று தயவு செய்து விளக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**MR. SPEAKER**: எந்த ரூல் பிரகாரம் நடத்த முடியாது. என்று சொல்லுங்கள். பிறகு நான் இதற்குப் பதில் சொல்லுகிறேன்.

**SRI A. VEDARATHNAM**: நடத்தலாமா என்றுதான் கேட்கிறேன்.

**MR. SPEAKER**: ஏன் நடத்தக் கூடாது என்று கேட்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: There is no such convention. To anybody who knows about Parliament it will be clear that it is not incumbent on any Member to attend the House except to the extent necessary to conform to the Articles of the Constitution.

(Deputy Speaker in the Chair)

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, I move—

"That the Madras Chit Funds Bill, 1960 (L.A. Bill No. 5 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration."

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Madras Chit Funds Bill, 1960 (L.A. Bill No. 5 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration."

* **THE HON. SRI R. VENKATARAMAN**: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவனது 1960-ம் வருஷம் ஏப்ரல் மாதம் ஜாயிண்ட் செலக்ட் கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. ஜாயிண்ட் செலக்ட் கமிட்டி பல அங்கத்தினர்கள் ஆலோசனை கேட்டு, இன்னும் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்களுடைய பிரச்சினைகள் எல்லாவற்றையும் பரிசிலனை செய்து, இந்த ரிப்போர்ட்டை இன்றைக்கு சமர்ப்பித்திருக்கிறது. இந்தச் சட்டத்தினுடைய நோக்கம் இப்போது எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லாமல் நடந்து வருகின்ற சிட் பண்டுகளை சட்டத்திற்கு உட்பட்டு, சட்ட வரம்புக்குட்பட்டு சட்ட விதிகளுக்கு உட்பட்டு நடத்த வேண்டுமென்பதுதான். இதை நான் முதலில் பிரரேபித்த போது திருவாங்கூர்-கொச்சியிலுள்ள ஷரத்துக்கள் பலவற்றைக் கொண்டதாகவும் நம்முடைய ராஜ்யத்திற்கு அவசியமாகவுள்ள ஷரத்துக்களையும் போட்டு நான் முதலில் இந்த சட்டசபையில் பிரரேபித்தேன். செலக்ட் கமிட்டிக்குச் சென்ற பிறகு பல மாறுதல் செய்யப்பட்டிருக்கிறது. அதில் முக்கியமானவை இதில் நடைமுறையிலே இருக்கக்கூடிய பல தொந்தரவுகளை நீக்க வேண்டுமென்பதற்காகச் செய்யப்பட்ட மாறுதல்களாகும். உதாரணமாக நான் மசோதாவை முதலில் கொண்டுவந்தபோது, எந்த சிட் பண்டு நடத்த ஏற்பாடு செய்வதாக இருந்தாலும், அப்படி ஏற்பாடு செய்வதற்கு முன்னாலேயே டிபாசிட் செய்து விட வேண்டுமென்று இருந்தது. செகியூரிடி முதலில் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருந்தது. அது கஷ்டமாக இருக்கும் என்ற காரணத்தால் அதை மாற்றி

முதலிலே ரிஜிஸ்டர் செய்துகொண்டு. அதன்பிறகு டிபாசிட் செய்தால் போதும் என்று செய்திருக்கிறோம். அதாவது, சிட் பண்டை தொடங்குவதற்கு முன்னால் டிபாசிட் செய்தால் போதும். அப்படி டிபாசிட் கட்டியபிறகுதான் சிட் பண்டு ஆரம்பிக்க வேண்டுமென்று இருந்ததை நாம இப்போது திருத்தி அமைத்திருக்கிறோம். இதனால் "கம்மென்ஸ்மெண்ட் ஆப் பிசினஸ்" என்று கம்பெனி சட்டத்தில் உள்ளது போலுள்ள அதே முறையில், வேலை தொடங்குவதற்கு முன்னால் டிபாசிட் செய்தால் போதுமானது.

இரண்டாவதாக, ஒரு முக்கியமான ஷரத்து செய்திருக்கிறோம். மசோதாவின் ஆரம்பததில நாம் டிபாசிட் கொடுக்கும் தொகையானது முழுத்தொகையையும் ரொக்கமாக கட்ட வேண்டுமென்று போட்டிருந்தோம். அதைத் தவிர, சொத்து ஜாமின் கொடுப்பதாக இருந்தால், சிட் பண்டு நடத்துவதற்குத் தேவையான இரண்டு மடங்கு தொகை டிபாசிட் செய்ய வேண்டுமென்று நாம் முதலில் போட்டிருந்தோம். ஆனால் செலக்ட் கமிட்டி பரிசீலனை செய்து இவ்வளவு அதிகமான அளவுக்கு டிபாசிட் கொடுத்தால் சிட் பண்டுகள் பாதிக்கப்படலாம் என்று எண்ணி, ரொக்க ஜாமின் கொடுப்பதாக இருந்தால் பாதி அளவுக்குக் கொடுத்தால் போதுமானது என்றும், சொத்து ஜாமின் கொடுப்பதாக இருந்தால் முழு அளவு கொடுக்க வேண்டுமென்றும் மாறுதல் செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் சிலவிதமான சிட் பண்டுகள் அதாவது வியாபாரிகள் லாபத்திற்கு என்று இல்லாமல் தாங்களே 10 பேர் அல்லது சில நபர்கள் சேர்ந்துகொண்டு எந்தவித தள்ளுபடியும் (டிடக்ஷன்) செய்யாமல், அவர்களுக்குள் உதவி செய்து கொள்ளுவதாக இருந்தால் அவர்களுக்கு இந்த சிட் பண்ட் சட்டமானது உண்டு என்று முன்னால் கருதப்பட்டது. ஆகவே இப்போது அவர்களுக்கு இந்தச் சட்டம் அமுலாகாது என்று மாறுதல் செய்திருக்கிறோம்.

அடுத்து ஜெனரல் பாடி முதலில் அமைக்கப்பட்டு, அந்த ஜெனரல் பாடி கூட்டம் கூறுகிற பிரகாரம் நடக்க வேண்டுமென்று நம்முடைய மசோதாவில் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. இப்போது அப்படிப்பட்ட ஜெனரல் பாடி கூட்டமோ, ஸ்பெஷல் கூட்டமோ கூட்டுவதற்கு அவசியமில்லையென்றும், ஒரு தரம் ஆரம்பித்து விட்டால். அதை மாற்ற முடியாது என்று விதிகளை மாற்றக் கூடிய நிலைமையில் இப்போது மாறுதல் செய்திருக்கிறோம்.

இந்த மசோதா மிகவும் அவசியமான மசோதா என்று ஆரம்பத்திலேயே விளக்கியிருக்கிறேன். இதில் இப்போது செய்யப்பட்டிருக்கின்ற மாறுதல்கள் நடைமுறைக்கும், நாட்டினுடைய வியாபார, வர்த்தக வளர்ச்சிக்கு உகந்த முறையில் இருக்கிறது. இதைவிட இன்னும் லிபரலைசேஷன் காட்ட வேண்டுமென்று சொன்னார்கள். அதாவது இந்த டிபாசிட் தொகையை வாங்கி பற்று வைத்துக் கொள்ளவேண்டுமென்றும், எந்தவிதமான கணக்குகளும் கேட்கக் கூடாது என்றும் அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்பட்டது. ஆனால் இதை செலக்ட் கமிட்டி ஏற்றுக்கொள்ளவில்லை. அந்த அபிப்பிராயங்கள் ஒத்துக்கொள்ளப்பட்டால், இந்தச் சட்டம் எந்தவித உபயோகமும் இல்லாமல் போய்விடும். எத்தனையோ நபர்கள், கிராமங்களில் பல பகுதிகளில் சிட் பண்டுகளில் பணம்

கட்டிவிட்டு வசூல் செய்ய முடியாமல் நஷ்டமடைந்திருக்கிறார்கள். அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டியது இந்த சட்ட சபையின் பொறுப்பாகும். ஆகையால்தான் இந்த திருத்தங்களுடன் இந்த மசோதாவைப் பிரேரேபிக்கின்றேன். இதைச் சபை ஆதரிக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

SRI S. LAZAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சபையின் முன் வைக்கப்பட்டிருக்கின்ற மசோதாவை முழு மனதோடு வரவேற்று, அதைப்பற்றி என்னுடைய கருத்துக்கள் சிலவற்றைக் கூற முற்படுகிறேன். சீட்டு பிடிக்கும் பழக்கம் நமது நாட்டில் வெகு நாட்களாக இருந்து வருகிற விஷயம் என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒரு அம்சமாகும். இதை வெகு நாட்களாக நம் நாட்டிலே கையாண்ட முக்கியமான காரணங்களை ஆப்ஜக்ட்ஸ் அண்ட் ரீசன்ஸ் என்பதிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. முதலாவது நோக்கம், பணத்தை சேமித்து வைப்பதற்கு இது ஒரு ஆதாரமாக இருக்கிறது என்று இம்முறையை கையாண்டுக் கொண்டு வருகிறார்கள் என்பது. இதைவிட மற்றொரு முக்கியமான நோக்கம், திடீரென்று ஒரு பெரிய தொகை தேவைப்படுகிறது என்று சொன்னால், அதைப் போய் கடன் வாங்குவதற்குப் பதிலாக, இதுபோன்ற சீட்டு பண்டுகள் முறையைக் கையாண்டு வேண்டிய அளவு தொகையைப் பெற்றுக் கொள்ளலாம் என்பதாகும். இவைகள்தான், சீட்டு பிடிக்கும் பழக்கமானது வெகு காலத்திற்கு முன்னுலிருந்து வருவதற்கு தகுந்த காரணங்களாகும். ஆனால் இதிலே அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொல்லியதுபோல், பலவிதமான சீட்டு பண்டுகள் இப்போது இருக்கின்றன. இந்தச் சீட்டு பிடிக்கும் முறையானது ஏதோ நகரத்திலே மட்டும் இருக்கிறது என்று தயவுசெய்து எண்ணிவிடக் கூடாது. இந்தப் பழக்கம் சாதாரணமாக பட்டி தொட்டிகளிலிருந்து, பெரிய நகரங்கள் வரைக்கும் இருந்துகொண்டு வருகிறது. இதைக் கையாளும் முறைகூட பலவாறாக மாறுபடுகின்றது. சாதாரணமாக கிராமத்திலேகூட பெண்கள் 10, 20 பேர்கள் சேர்ந்து கொண்டு, பணம் போட்டு சீட்டுப் பிடித்துக் கொள்ளக்கூடிய பழக்கம் இருப்பதை நாம் பார்க்க முடியும். இதிலே தனிப்பட்ட ஒருவருக்கு கமிஷனே அல்லது ரெமியூனரேஷனே எடுத்துக் கொள்வது கிடையாது. அதேபோல நகரங்களிலே கூட, பெரிய பஞ்சாயத்துக்களிலே கூட, ஆபீசிலே வேலை செய்யும் உத்தியோகஸ்தர்கள் கூட அல்லது வியாபாரிகள் கூட கனம் அமைச்சர் அவர்கள் சொல்லிய முறைப்படி 10, 15, 20 பேர்கள் சேர்ந்துகொண்டு குறிப்பிட்ட ஒரு தொகைக்கு சீட்டுபோட்டு; அதை எடுத்துக்கொள்வது வழக்கமாக இருக்கிறது. அப்படி எடுத்துக்கொள்ளும் பணத்திற்கு சிலர் கசர் பிடித்து பணம் பங்கிட்டு எடுத்துக் கொள்கிறார்கள். அவர்களைக் கூட கனம் அமைச்சர் அவர்கள் சொல்லியபடி இந்தச் சட்டம் பாதிக்காது. அது வரவேற்க வேண்டிய அம்சம்.

மூன்றாவதாக ஒரு சீட்டு இருக்கிறது. அதைப் பொறுத்துத்தான் சட்டம் கொண்டு வர வேண்டியது அவசியமாக இருக்கிறது. இந்தச் சீட்டுத்தான் ஒரு வியாபாரமாக நடத்தக் கூடியது. இப்படி அதிலிருந்து வரக்கூடிய கமிஷனையோ அல்லது ரெமியூன

31st January 1961] [Sri S. Lazar]

ரேஷனேயோ வைத்துக் கொண்டு, அதை ஒரு தொழிலாக நடத்து வது என்று சொன்னால், அதில் இப்போது பல குறைகள் நடந்து கொண்டு வருகின்றன. பல பேர்களை சீட்டுப் பிடித்தவர்கள் ஏமாற்றக்கூடிய நிகழ்ச்சிகள் இன்று நாட்டிலே நடந்து வருகின்ற காரணத்தால், இந்தச் சட்ட முறையைக் கட்டுப்படுத்தி, சரியான முறையில் சீட்டு பண்டுகளை நடத்தி பாதுகாப்பளிக்க வேண்டு மென்ற முறையிலே இந்த மசோதா இங்கே கொண்டு வரப் பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். ஆனால் இதிலே கொடுக்கப் பட்டிருக்கின்ற வரையறையின்படி, மற்றைய சீட்டுகளைக்கூட சில விதிகள் சம்பந்தப்படுத்துவதாக இருக்கிறது என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். உதாரணமாக, இதிலே கசர் எடுத்துக் கொள்ளக்கூடிய நிலைமை இருந்தாலும் கூட, இதிலே வரக்கூடிய விதிகளைப் பார்த்தால் லைசென்ஸ் அல்லது ரிஜிஸ்தர் செய்து கொள்ள வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதை நான் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அதைப் பொறுத்தவரைக்கும் சட்டம் இருக்கவேண்டிய அவசியம் கிடையாது. கமிஷன் என்று வைத்துக்கொண்டு இதை ஒரு வியாபாரமாக நடத்தக்கூடியவர் களுக்கு மட்டுமே இந்த மசோதா அமுலாக்கப்படவேண்டுமே தவிர மற்ற முறைகளிலே இதை புகுத்தவேண்டிய அவசியம் இல்லை என்ற கருத்தினை முதல் முதலாக அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அங்கத்தினர் அவர்கள் கிளாஸ் 2-ஐ படித்தார்களேயானால் அதில் இது சேர்க்கப்படவில்லை என்பது நன்றாகத் தெரியும்.

"A transaction is not a chit within the meaning of this clause, if in such transaction—

(b) all the subscribers get the whole of the chit amount by turns with a liability to pay future subscriptions."

கமிஷன் இல்லாமல் அவர்கள் இந்தத் தொகையை பிரித்துக் கொள்ளுவதானால் அது சிட் அல்ல என்று நாம் கண்டிருக்கிறோம். கீழே கொடுக்கப்பட்டிருக்கிற 'இல்லஸ்டிரேஷனைப்' பார்த்தாலும் இது நன்றாக தெளிவாகத் தெரியும். கமிஷன் வாங்கி போர்மென் வைத்து நடத்துகிறவர்களைத்தான் இந்த மசோதா கட்டுப்படுத்து கிறது.

SRI S. LAZAR : நான் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புவது என்னவென்றால், இதிலே "Whole of the chit amount" என்று கண்டிருக்கிறது. "Whole of the chit amount" என்று சொல்லுவதினால் "It includes not only the prize amount but also the discount".

ஆகையினாலே, உதாரணமாக 10 பேர்கள் சேர்ந்து கமிஷன் இல்லாமல் போடக்கூடிய சீட்டிலே, அதாவது 10 பேர் சேர்ந்து ஆளுக்கு ரூ. 100 வீதம், ரூ. 1000-க்கு சீட்டு போட்டால், 10 பேர்கள் சேர்ந்து ஏலம் எடுக்கும்பொழுது, ஒருவர் அந்த சீட்டை ரூ. 700-க்கு எடுத்தால், அவருக்கு அந்தப் பணத்தைக் கொடுக்கிறோம். ஆனால் சீட்டை நடத்தக்கூடிய போர்மெனுக்கு

ஒன்றும் கமிஷன் கிடையாது. ரூ. 700 போக பாக்கி ரூ. 300-ஐ 10 பேர் கசராப் பிரித்து எடுத்துக்கொள்ளுகிறார்கள். அதில் யாருக்கும் தனியாக ஆதாயம் ஏற்படுவது கிடையாது. போர் மென்னை பொறுத்தவரைக்கும் அதில் குற்றங் குறைகளோ, கஷ்டங்களோ வருவதற்கு காரணம் கிடையாது. அப்பேற்பட்ட சிட்டு முறையை கட்டுப்படுத்தவேண்டிய அவசியம் இல்லை என்பதை முதன் முதலாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இந்த மசோதவைக் கொண்டுவருகிற நோக்கத்தைப் பார்க்கும்பொழுது, இதை நடத்தக்கூடியவர்கள் அதிகப்படியான வட்டியையோ அல்லது இதை ஒரு தொழிலாக நடத்தக்கூடியவர்கள் இதை ஒரு லேவாதேவியாக 'மணி லெண்டிங் பிஸினஸாக' நடத்தினபோதிலும்கூட, 'மணி லெண்டர்ஸ் ஆக்ட்'-டிலிருந்து தப்பித்துக்கொள்ளுகிறார்கள் என்ற அடிப்படையிலும்கூட, இந்த மசோதாவில் அதற்கான அம்சங்களை அமைத்து, அதற்கான கட்டுப்பாடுகள் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதே போல வட்டி விகிதத்தை அளவுக்கு மிஞ்சி அவர்கள் எடுத்துக்கொண்டு சீட்டுப் போடுகிறவர்களுக்கு நிலைமை தெரியாதவாறு நடந்துகொள்ளக் கூடிய முறையையும் கட்டுப்படுத்தி அதையும் ஒரு ஒழுங்கான விதத்தில் கொண்டுவருவது நல்ல ஒரு அம்சம் என்று சொல்ல வேண்டும். அதே போல இப்பொழுது இதில் இருக்கக்கூடிய கஷ்டங்களையெல்லாம் நிவர்த்தி செய்யக்கூடிய முறையிலே பல அம்சங்கள் அமைந்திருக்கின்றன. சீட்டுப் போடுகிறவர்களுக்கு அவர்கள் கொடுக்கக்கூடிய பணம் சரியான முறையில் தங்களுக்குத் திரும்பி வருமா, இல்லையா என்ற சந்தேகம் ஏற்பட்டுவிடுகிறது. சில சந்தர்ப்பங்களில் போலி ஆட்கள் திடீரென்று சீட்டுகளை ஆரம்பிக்கிறார்கள். 3, 4 தவணை ஆனபிறகு மறைந்துவிடுகிறார்கள். 3, 4 தவணைகளில் கட்டிய பணத்தை அவர்கள் எடுத்துக்கொண்டு சென்றுவிடுகிறார்கள். அதைத் தடுப்பதற்கு ஒரு ரிஜிஸ்டிரேஷன் முறை, லைசென்ஸ் முறை கொண்டு வருவது மிகவும் அவசியம் ஆகும். ஆகையினால் பொதுவாக வட்டி விகிதத்தை அதிகப்படுத்தாமல் இருப்பதற்கும், சீட்டுப் பிடிப்பவர்கள் அதிகப்படியான கமிஷன் எடுத்துக்கொள்ளாமல் இருப்பதற்கும், அதே போல சீட்டு பிடிப்பவர்களுக்கு அவர்களுடைய விகிதத்தை ஒழுங்காக கொடுப்பதற்கும் சீட்டு எடுத்தவர்கள் மறுபடியும் ஒழுங்காகவும், நியமமாகவும் சீட்டுப் பணத்தைக் கொடுப்பதற்கும் ஆக இந்த நான்கு அம்சங்களைக் கொண்டு இந்த மசோதா அமைந்திருப்பது நிச்சயமாக வரவேற்கத்தக்கதுதான். அதைவிட சற்று அதிகமாகச் சென்று இந்தத் தொழிலை பாதிக்கக்கூடிய முறையிலே பல விதமான கட்டுப்பாடுகளைக் கொண்டுவரும்பொழுது நிச்சயமாக இந்த சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சி செய்வார்கள், இந்தத் தொழிலுக்கும் பாதகம் ஏற்படும். அதனால் 'ஈவேஷன்' அதிகமாக ஏற்படும் என்ற கருத்தினையும் அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த மசோதாவைப் பொறுத்தவரைக்கும் ஒவ்வொரு கட்டத்திலும் ரிஜிஸ்டிராருக்கு போகவேண்டிய அவசியத்தை ஏற்படுத்தியிருக்கிறோம். நல்ல முறையிலே கணக்கு வழக்குகள் இருக்க

31st January 1961] [Sri S. Lazar]

வேண்டும். நல்ல முறையிலே ரிஜிஸ்டிரேஷன் செய்யப்படவேண்டும் என்ற அம்சங்கள் முக்கியமானதுதான். அதைத் தொடர்ந்து ஒவ்வொரு கட்டத்திலும் ரிஜிஸ்டிராருக்குச் சென்று பதிவு செய்துகொள்ளவேண்டும் அல்லது பணத்தைக் கட்டவேண்டும் என்ற முறையில் வைப்போமானுல், நிச்சயமாக நடைமுறையிலே அது சாத்தியமாகாது. அது முக்கியமாக எந்த உத்தியோகஸ்தரை ரிஜிஸ்டிராராக நியமிக்கப்போகிறோம் என்பதைப் பொறுத்து இருக்கிறது. தாலுகா அலுவலகத்தில் இருப்பவரை ரிஜிஸ்டிராராக நியமித்தால், கிராமத்தில் இருக்கக்கூடியவர்களுக்கு மிகவும் கஷ்டம் ஏற்படும். அல்லது நகரத்திலே உள்ளவரை ரிஜிஸ்டிராராக நியமித்தால், நிச்சயமாக பெரிய பஞ்சாயத்துக்களிலும் கிராமங்களிலும் இருக்கக்கூடியவர்களுக்கு பாதகம் ஏற்படும். ஆகவே, ரிஜிஸ்டிராரை நியமிக்கும்பொழுது இந்தக் கருத்தினை நிச்சயமாக அமைச்சர் அவர்கள் மனதில் கொள்ளவேண்டும். அந்தந்த இடத்தில் உள்ளவரை ரிஜிஸ்டிராராக நியமிப்பதற்கு நல்ல முறையில் வாய்ப்பை ஏற்படுத்திக்கொடுக்க வேண்டும்.

அதேபோல, ஒவ்வொரு கட்டத்திலும் பாங்கில் டெபாசிட் செய்ய வேண்டிய முறையை பல இடங்களில் பல கட்டங்களில் நாம் இந்த மசோதவில் அமைத்திருக்கிறோம். அதிலே இருக்கக்கூடிய கஷ்டத்தை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். ஒவ்வொரு கிராமத்திலும் பாங்கு கிடையாது. பெரிய பெரிய பஞ்சாயத்துக்களில் கூட பாங்குகள் கிடையாது. பெரிய நகரங்களில் அல்லது மேஜர் பஞ்சாயத்துகளில் வேண்டுமானுல் இந்த பாங்குகள் இருக்க முடியும். அப்படியிருக்கும் பொழுது ஒவ்வொரு கிராமத்தில் இருக்கக்கூடிய சிட்டு நடத்துபவர்கள் அத்தனை பேர்களும் நகரங்களுக்கு வந்து பாங்குகளில் பணத்தை டெபாஸிட் செய்யவேண்டும் என்ற முறையை வைப்போமானுல், ஒவ்வொரு தடவையும் அவர்கள் நகரத்திற்கு வர வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. நிச்சயமாக அதனுல் அவர்களுக்கு எவ்வளவு செலவழியும் என்பதை புரிந்துகொள்ள முடியும். ஆகையால் அவர்கள் இந்த முறையிலிருந்து தப்பித்துக் கொள்ள முயற்சி செய்வார்கள் என்ற கருத்தினையும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இதே போன்று 'மணி லெண்டர்ஸ் ஆக்டை'-ப்பற்றி பேசும் பொழுது ஒரு முக்கியமான கருத்தினை எடுத்துச் சொன்னேன். அதிலே "ஹயர் பர்சேஸ் ஸிஸ்டம்" இருக்கிறது. நாம் இந்தச் சட்டத்தை சற்று கடுமையாக கொண்டு வருவோமானுல் இந்தத் தொழில் வேறு ஸ்தலங்களுக்கு மாறிவிடும். ஆகையினுல் இதிலே சற்று ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று எடுத்துச் சொன்னேன். அதை அடுத்து சட்டம் நிறைவேறிய பிறகு கூட இதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தேன். இன்றையதினம் நடக்கக்கூடிய 'பிஸினஸ்' அத்தனையும் வேறு மாகாணங்களுக்கு இப்பொழுது 'ஷிப்டு' ஆகிவிட்டது என்பதை ரெவின்யூ அமைச்சர் அவர்களின் கவனதிற்குக் கொண்டு வந்தேன். 'ஹயர் பர்சேஸ் ஸிஸ்டத்தை' எடுத்துக்கொண்டால், இந்த மாகாணத்தில் சென்ற வருஷத்தில் பெரிய லாரி, பஸ் ஓனர்கள், பெரிய பெரிய மெஷினரிகள் வாங்கக்கூடியவர்கள்

[Sri S. Lazar] [31st January 1961

அத்தனை பேர்களும் பணத்தை ஏராளமாகப் போட்டு நடத்திக் கொண்டு வந்தார்கள். இப்பொழுது இந்த லைசென்ஸ் முறை வந்த பிறகு இந்த பிஸினஸ் மற்ற மாநிலங்களுக்கு மாறிவிட்டது. இங்கு இருக்கக்கூடியவர்கள் மைசூரில் இந்தத் தொழிலை ஆரம்பித்துவிட்டார்கள், பங்களூரில் ஆரம்பித்து விட்டார்கள். அதே போன்ற நிலைமை இந்தத் தொழிலிலும் ஏற்படாமல் இருப்பதற்காகத்தான் இந்த அம்சங்களை இப்பொழுது அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, போர்மெனை இருந்து நடத்தக்கூடியவர்கள் சரியான முறையில் சிட்டை நடத்துகிறார்களா என்பதை கண்காணிக்கக்கூடிய முறையில் டெபாசிட் தொகை, செக்யூரிடியாக கட்டவேண்டும் என்ற அம்சம் மிகவும் வரவேற்கக்கூடியது. இந்த அம்சம் இல்லை என்று சொன்னால், நிச்சயமாக சிட்டு கட்டக்கூடியவர்களுக்கு அடிக்கடி ஏமாற்றம் ஏற்படும். அந்த விதத்தில் இது நன்மையாக அமைந்திருப்பதை எல்லோரும் வரவேற்கத்தான் வேண்டும். அதோடு கூட, போர்மெனை இருக்கக்கூடியவர் பணத்தை பட்டுவாடா செய்வதற்கு முன்னால் யாருக்கு சிட்டு விழுகிறதோ அவருக்கு பட்டுவாடா செய்வதற்கு முன்னால், அவரிடமிருந்து போதிய செக்யூரிடி ஏற்றுக்கொண்டுதான் செய்ய வேண்டும் என்ற அம்சமும் வரவேற்கக்கூடியதேயாகும். இதில் நடைமுறையில் இருக்கக்கூடிய மற்றொரு சிக்கலையும் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். சாதாரணமாக யாருக்கு சிட்டு விழுகிறதோ அவருக்கு பணம் கொடுக்கிறபொழுது செக்யூரிடியாக பூராத்தொகைக்கும் ஒரு புரோநோட்டு எழுதி வாங்கி வைத்துக்கொள்ளுகிறார் போர்மென். அதற்குப் பிறகு அவர் ஒழுங்காக பணத்தை கட்டிக்கொண்டு வந்த போதிலும்கூட, அந்த நோட்டில் செல்லு வைப்பது கிடையாது. ஆகையினால் அவர்களுக்கிடையே ஏதாவது மன வருத்தம் ஏற்பட்டால், அல்லது ஏதாவது ஒரு தவணை பணம் கட்டாவிட்டாலும் கூட பூரா புரோநோட்டுத் தொகைக்கும் அவர் மீது தாவா தொடுத்து விடுகிறார்கள். அதன் காரணமாக, சிட்டுப் போடுகிறவர்களுக்குத் தொல்லை ஏற்படுகிறது. இந்த அம்சத்தையும் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அமைச்சரவர்கள் கூட ஒரு திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்கள்; தாவா தொடரும்பொழுது, சிட்டு பாக்கிக்காக வாங்கப்பட்ட ப்ரோ நோட்டு என்று இருந்தால் அப்பொழுது தான் டிக்ரி கொடுக்க முடியும் என்று குறிப்பிட்டார்கள். அது வரவேற்கத் தக்கது. ஆனால், நடை முறையில், அதையும் கூட காட்டாமல் வெறும் பரோ நோட்டாக கொடுத்திருந்தால் தாவா தொடரும்போது, எதிர்க் கட்சியாடுகிறவர்கள், சிட்டு முறையிலே ஏற்பட்ட ப்ரோநோட்டு என்று நிரூபிக்க முடிவதில்லை. சரியான கணக்கு வழக்குகள், வௌசர்கள், இல்லாததால், நடைமுறையிலே பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, இம்மாதிரிக் கணக்குகள் சரியான முறையில் வைக்க வேண்டும், ரெஜிஸ்டர் செய்துகொள்ள வேண்டும், அக்ரிமெண்டை பதிவு செய்து கொள்ள வேண்டும் என்பதிலெல்லாம்

31st January 1961] [Sri S. Lazar]

கண்டிப்பாக இருந்து, இவற்றைக் கையாண்டால், அதிகாரிகள் கண்ணுங்கருத்துமாக இருந்தால், இந்தக் கஷ்டங்கள் நிவர்த்தியாகும்.

இன்னும் வேறு பல நல்ல அம்சங்கள் இருக்கின்றன. முக்கியமாக கோர்ட்டுகள். சீட்டு நல்ல முறையில் நடக்கவில்லையென்றால் அது சம்பந்தமாக கோர்ட்டுகளுக்கு தாவா செய்து கொள்வதில், சென்னையைப் பொறுத்தவரை சிட்டி சிவில் கோர்ட்டுக்கும், ஜில்லாவாக இருந்தால், அங்கே ஜில்லா நீதி மன்றத்திற்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைச் சற்று ஆலோசித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஒவ்வொரு கட்டத்திற்கும் ஜில்லா கோர்ட்டு அளவுக்கு வரவேண்டுமானால், பல தொல்லைகள் ஏற்படும். சென்னையைப் பொறுத்தவரையில், சிட்டி சிவில் கோர்ட்டு சரி. ஆனால், மற்றைய மொபஸல் ஏரியாக்களில் ஒவ்வொரு தடவையிலும் முடிவு கொடுக்க வேண்டும் என்று சொல்லும்போது, ஜில்லா நீதிபதியிடம் செல்ல வேண்டுமென்றால் அது கஷ்டமாக இருக்கும். தவிரவும், இன்ஸால்வென்சி தாவாக்கள் கூட சப் கோர்ட்டுகளுக்கு கொடுத்திருக்கிறோம். அப்படியிருக்கும்போது, கிராமங்களிலே நடக்கும் சீட்டு சம்பந்தமாக ஜில்லா கோர்ட்டு என்றால் அது மக்களுக்கு தொந்தரவாக அமையும். இந்த நிலைமை காரணமாக, இன்ஸால்வென்ஸி முறையின் பிரகாரம், ரூபாய் அளவை அடிப்படையாக வைத்துக் கொண்டு இத்தனை ரூபாய்க்குள்ளிருந்தால் முன்சீப் கோர்ட் என்றும் இத்தனை ரூபாய் அளவானால், சப் கோர்ட்டு என்றும், அதற்கு மேல் ஜில்லா கோர்ட்டு என்று அமைத்தால், கிராமத்தில் உள்ளவர்களுக்கும், பெரிய பஞ்சாயத்தில் உள்ளவர்களுக்கும் கூட கஷ்டம் இராது. அல்லது அதற்குப் பதிலாக இப்பொழுது இருக்கும் முறைப்படி, ரூ. 100-க்கு மேல் சீட்டு இருக்குமானால், அல்லது ரூ. 200 என்று வைத்தாலும், குக்கிராமங்களில் உள்ளவர்களும் திருச்சி போன்ற நகரங்களுக்கு வந்து தாவா தொடுக்கும் முறையில் அவர்களுக்குப் பல கஷ்டங்கள் ஏற்படும். அதைக் கவனித்துத் தக்க திருத்தம் செய்யவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சில சந்தர்ப்பங்களிலே அரசாங்கத்தின் அனுமதி பெற்றுத்தான் தாவாக்கள் தொடரலாம் என்று இருப்பது கஷ்டமாக இருக்கும். இதையும் கூட அரசாங்கம் கவனிக்க வேண்டும். ஏற்கனவே நில சம்பந்தமான சட்டங்களில் ஒவ்வொரு தடவையும் ரிவிஷன் என்று சொன்னால் சென்னைக்கு வராமல் அமைக்க வேண்டும், விவசாயிகளுக்குக் கஷ்டம் வருகிறது என்று சொன்னோம். அதே போல, இதிலேயும் தாவா தொடரவேண்டும் என்றால், சம்பந்தப்பட்ட இடத்தில் தொடரலாம் என்று சட்டத்தை அமைத்துக் கொள்ள வேண்டும். இங்கே சர்க்கார் அனுமதி பெறவேண்டும் என்று இருப்பதால், ஒவ்வொரு தடவையும் சர்க்காரை அணுகுவது என்பது மிகுந்த தொல்லையைக் கொடுப்பதாக அமையும். ஆகவே, ஜில்லா ரீதியாக இருக்கக் கூடாதா என்று கேட்க விரும்புகிறேன். கலெக்டர் அளவில் இருந்தால் போதும். சர்க்காருக்கு வரவேண்டிய அவசியம் என்ன என்பதைக் கவனிக்க வேண்டும்.

அதே போல அப்பீல் என்று சொல்லும் போதும், உடனே உயர் நீதி மன்றத்திற்கு வரவேண்டும் என்று இருக்கிறது. அம் மாதிரி அமைப்பதில் விவசாயிகள் சட்டத்திலே கஷ்டங்கள் இருந்தன விவசாயிகளுக்கு; நிலச் சொந்தக்காரருக்கு எத்தனை தடவை வேண்டுமானாலும் உயர் நீதி மன்றத்திற்குப் போக முடியும். ஆகவே, அங்கங்கே ஜில்லாவிலிருக்கும் நீதி மன்றங் களுக்கு என்று வைத்தால், அந்தக் கருத்தினை ஏற்றுக் கொண்டால், முதலில் முன்சீப் கோர்ட்டு என்றும், அதன் மேல் சப் கோர்ட்டு என்றும், அதற்கு மேல் அப்பீல் என்றால் அது ஜில்லா கோர்ட்டிலேயே இருக்கும். அந்த முறையில் உயர் நீதி மன்றத்திற்கு வரவேண்டிய அவசியம் ஏற்படாது.

அதே போல, இந்த சிட்டுகளை நடத்துகிறவர்கள், போர்மென், பல கட்டங்களிலே அவர்கள் அரசாங்கத்திற்கோ அல்லது அதிகாரி களுக்கோ கட்டணம் கொடுக்க வேண்டும் என்று விதிக்கப் பட்டிருக்கிறது. இப்பொழுது இருக்கக்கூடிய சட்டப்படி அவர்கள் எட்டு சந்தர்ப்பங்களிலே கட்டணம் செலுத்த வேண்டி யிருக்கிறது. நடைமுறையிலே அதிகப்படியான கட்டுப்பாடுகள் செய்யச் செய்ய, சம்மந்தப் பட்டவர்கள் தப்பித்துக் கொள்ள முயற்சிப்பார்கள். எவ்வளவுக்கெவ்வளவு கட்டங்களைக் குறைக் கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லதல்லவா என்று அமைச் சரைக் கேட்கிறேன்.

டைரக்டர் ஆப் சிட்ஸ் என்றால், அதையும் மாகாண ரீதியில் அதிகாரியை அமைக்கும் போது நடைமுறையிலே பல கஷ்டங்கள் ஏற்படும். ஆகவே அதையும் டிஸெண்ட்ரலைஸ் பண்ணி வைத்தால், கஷ்டங்கள் இருக்காது என்று சொல்ல விரும்புகிறேன்.

ஆகையினால், இந்த மசோதாவை நல்ல முறையிலே அமுல் நடத்த நான் குறிப்பிட்ட ஒரு சில கருத்துக்களை மனதில் கொண்டு திருத்தங்கள் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதோடு கூட விதிவிலக்கு அளிப்பதில், அரசாங்கத்திற்கு அதிகாரம் எடுத்துக் கொள்ளப்படுகிறது. எப்படி இப்பொழுது சினிமாத் துறையில் லைசென்ஸ் வழங்குவதில் விதிவிலக்கு அதிகாரம் இருக்கிறதோ அதேபோல் செய்து கொள்ளலாம். அப்பொழுதுதான் இந்தச் சட்டத்திலேயும் கஷ்டங்கள் இல்லாமல் அமையும். இந்த அதிகாரம் சர்க்காரிடம் இருக்க வேண்டிய அவசியம் இல்லை; அதன் காரணமாக அரசாங்கத்தையும் அடிக்கடி குறைசொல்லும் வாய்ப்பும் ஏற்படாமல் இருக்கும். இந்தக் கருத் தினையும் அமைச்சர் அவர்கள் ஆலோசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். நல்ல அம்சங்கள் பல இருக்கும் இந்த மசோதாவை, கட்டுப்பாடுகள் அளவுக்கு மேல் இருந்தால் அவற்றைத் திருத்தியமைத்துக் கொள்ள வேண்டும். இந்த மசோதாவை இந்த சபை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறிக் கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

31st January 1961]

SRI T. T. DANIEL: While supporting this Bill I intend to bring some facts for the consideration of Government. As the Hon. Minister has correctly said the object of the Bill is to regulate the chit business, to protect the interests of the foreman as well as the subscribers and to prevent fraud both on the part of the foreman as well as the subscribers. This Bill has been framed more or less on the lines of the Travancore Chitties Act, which has been repealed by this Bill.

I would like to bring to the attention of the Hon. Minister that at present the chits conducted by banks are also brought within the four corners of the Bill. I would suggest to Government that if the foreman happens to be a bank, since banks are governed by the Banking Companies Act of 1949, it is not necessary that we should include such chits conducted by banks within the purview of the present Bill. Under this Bill we could exclude the chits conducted by banks. The reason is that if the foreman happens to be a bank, the institution, viz., the bank is governed by the Banking Companies Act and as such there is regular auditing of the accounts of banks and they are done promptly under the provisions of the abovesaid enactment (Banking Companies Act of 1949). So, there is no necessity to include chits conducted by banks, wherein the foreman happens to be a bank, within the purview of this Bill.

The second point I would suggest is regarding the security that the foreman has to give. I would suggest that the foreman should give security equal to the price amount, whether that security is movable or immovable.

Sir, regarding the nature of the security, clause 12 says that the security that the foreman is giving cannot be attached by any decree passed by any Civil Court. This is what sub-clause (3) of clause 12 of the Chit Funds Bill is—

" Subject to the provisions of section 520 of the Companies Act, 1956 (Central Act I of 1956), the security given by the foreman under sub-section (1)————shall not be liable to be attached in execution of a decree or otherwise—

(i) until the chit is terminated and the claims of all the subscribers are fully satisfied;

(ii) until all dues payable by the foreman under this Act to the Registrar or any other officer have been paid; "

Sub-clause (6) of clause 12 further adds—

" Notwithstanding anything to the contrary contained in any other law, the security furnished under this section shall not be dealt with by the foreman during the currency of the chit and any dealing by the foreman with respect thereto by way of transfer, charge, mortgage or other encumbrance shall be void."

I would respectfully submit that clause as it stands is *ultra vires*. Taking into consideration the provisions of Article 254 of the Indian Constitution Act and the Civil Procedure Code, they clearly say what all things are exempted from attachment in the execution of

a decree passed by the Civil Court. The Civil Procedure Code has clearly given an exhaustive list of various items of properties, which alone cannot be attached in the execution of the decree. The Civil Procedure Code is an Act passed by the Parliament. The question therefore, is whether by a special law passed by the State Legislature, provisions can be inserted in that law, which will be repugnant to the provisions that are contained in the Act passed by the Parliament. I would like to refer to Article 254 of the Constitution which runs as follows :—

"254. (1) any provision of a law made by the Legislature of a State is repugnant to any provision of a law made by Parliament which Parliament is competent to enact, or to any provision of any existing law with respect to one of the matters enumerated in the Concurrent List, then, subject to the provisions of clause (2), the law made by Parliament, whether passed before or after the law made by the Legislature of such State, or, as the case may be, the existing law, shall prevail and the law made by the Legislature of the State shall, to the extent of the repugnancy, be void."

I would, therefore, say that so far as clause 12 is concerned sub-clause (3) of clause 12 and also sub-clause (6) of clause 12 are repugnant to the provisions of the Civil Procedure Code and as such they had to be considered only *abinitio void*.

Further as the wording of the clause now stands no useful purpose will also be served by the clause. After all the security given by the foreman must be sufficient for the prize amount while he offers his security, he creates a charge on the immovable property so far as prize amount is concerned. If in the execution of a decree, any subsequent attachment is made in respect of the same property, such attachment is valid only subject to the interests that has already been created by the foreman in respect of the property for the chit amount and so there is no necessity for sub-clause (3) of clause 12 and also sub-clause (6) of clause 12. Sub-clause (6) of clause 12 says that after the foreman has given the security, he shall not alienate or create any further charge on such property, which is given as security. So far as the provisions of the Transfer of Property Act are concerned, whenever any charge is created in favour of anybody for a particular thing, then if the person subsequently creates the charge, such charge is only subject to the previous charge that has already been created. So I fail to understand why sub-clause 6 of clause 12 must be there. It prohibits the foreman to transfer the property and to create a charge, mortgage or any encumbrance. It should have been made clear, if it is needed, that any transfer or charge or mortgage or any encumbrance the foreman may create in respect of that property, such transfer, such charge, such mortgage or any encumbrance that he creates will be subject to this charge that he has already created in favour of the prize amount. I, would, therefore, request the Hon. Minister to look into this and consider the Article 254 and also the provisions of the Transfer of Property Act and find out whether it is necessary to have sub-clause (3) of clause 12 and also sub-clause (6) of clause 12.

31st January 1961] [Sri T. T. Daniel]

Clause 36 of the Bill provides for the inspection of chit books and records. It says that all the records must be kept by the foreman for a period of 12 years after the chit is terminated. I do not know why for such a long period, the foreman should have the records with regard to chit. As soon as all the rights and liabilities of subscribers are settled, there is no necessity for the foreman to keep the records for a further longer period. Now, as clause 36 stands, whether the subscribers' rights and liabilities are settled or not it is incumbent on the foreman to keep the records for 12 years. After all the chit business might be taken up by very poor people intelligent as well as unintelligent people; to expect them to keep the records for a period of 12 years will be creating unnecessary fetter on them and it is unnecessary also taking into consideration the object of the Bill.

Clause 37 says that if the foreman is a Banking Company as defined in the Banking Companies Act, 1949 (Central Act X of 1949) such inspection shall be made only at the premises of the company and only on a working day and such foreman shall pay such fees as may be prescribed by the inspecting authorities.

I would say that so far as inspection of records of the chit run by the Banking Companies is concerned, the Banking Companies have got their own auditors and that auditor has to be paid. If the auditor of the company alone is permitted to audit the accounts of the company, there may not be any necessity for the Bank to pay twice the auditors fee.

Regarding another point, now as it stands the right of appeal is always with the High Court. I would say that has been made taking into consideration of the territorial jurisdiction wherein the foreman has offered the security. Instead of taking the territorial jurisdiction as the basis for giving the District Court first to entertain suits regarding the chits, I would say that pecuniary jurisdiction may be considered. Taking into consideration the nature of the financial amount and the implications in a particular chit, the right to take up the legal proceedings should be decided not on territorial jurisdiction but on pecuniary jurisdiction.

Then again, if a Registrar refuses to register a chit agreement, then the foreman has to file an appeal before the Director of Chits, who most probably will be in Madras, and this may create hardship to the foreman. If the chit amount is very small nobody will bother to file a right of appeal before the Director of Chits. Therefore, I would make a suggestion that so far as chit agreements are concerned, they may be registered before the Sub-Registrar within whose jurisdiction the security is situated and the right of appeal in case of refusal to register the chit amount must be with District Registrar. Wherever the Registrar refused to register a Chittie, the right of appeal must be before the District Registrar himself. That will be convenient for all parties concerned, to the foreman, subscribers all alike, to file their objections and appeals at the district level. For the purpose of filing this appeal, they need not go to Madras from their villages.

(Mr. Speaker in the Chair.)

Sir, hon. Member Sri Lazar has stated that the villagers too must have an opportunity of conducting this business. With that object in view, we should make some modifications in the Bill so as to make the Registrar as the first party before whom the Chittie agreement should be registered. Just like documents are registered, the chittie agreement also can be registered before the Registrar within whose jurisdiction the property is situated. If the Sub-Registrar is made the first person before whom the security agreement should be registered, then the villagers also can have a part in conducting the chittie business. If they were to take it to the City level and if they have clauses in the Bill which prevent or offer hurdles to the villagers to continue the chittie business, I will only say that a large number of persons who are engaged in the chittie business will be forced to abandon the chittie business. I request the Hon. Minister to keep all these things in view and to bring forward a suitable amendment to the appropriate clause or clauses. I also request him to keep in mind the provisions contained in articles 254 according to which sub-clauses (3) and (6) of clause 12 are quite unnecessary.

* **Sri T. S. RAMASWAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா இந்த ராஜ்யத்திலே வெகுகாலமாக தேவைப் பட்டுக்கொண்டிருந்த ஒரு தேவையைப் பூர்த்தி செய்கிறது என்று நான் கருதுகிறேன். சென்ற 16 ஆண்டுகளாக இதைப் போன்ற ஒரு சட்டம் கன்னியாகுமரி ஜில்லாவில் நடைமுறையில் இருந்து கொண்டிருக்கிறது. அவர்களுக்கு அதில் எந்தவிதமான கஷ்டங் களும் ஏற்படவில்லை. ஆனால் இங்கே பலர் அதற்குப் பலவிதமான ஆட்சேபணைகளையும், ஆலோசனைகளையும் கூறியதனால் பொறுக்குக் கமிட்டியில் அவற்றை நன்றாகப் பரிசிலனை செய்து பல மாற்றங்கள் செய்திருக்கிறார்கள். உதாரணமாக அமைச்சர் அவர்கள் குறிப் பிட்டது போல ஒரு சீட்டு ஏலம் விடும்போது டெண்டரில் கூடச் செய்யலாம் என்று சௌகரியம் செய்யப்பட்டிருக்கிறது. ரிஜிஸ்ட் ராரின் சாங்ஷனுக்குப் பிறகுதான் ஒரு சீட்டைத் தொடங்கலாம் என்பதை மாற்றி பதிவு மட்டும் செய்தால் போதுமானது, யார் வேண்டுமானாலும் சீட்டை நடத்தலாம் என்றும் வசதி செய்யப்பட் டிருக்கிறது.

மேலும் சீட்டை நடத்துகிறவர்கள் ஜாமீன் தொகை கட்டாத தினால் சீட்டில் சேர்ந்திருக்கிறவர்களிடம் பணத்தை வாங்கிக் கொண்டு கடைசியில் அவர்களுக்குப் பணம் கட்டாமல் ஏமாற்றி யிருக்கிறார்கள். பலவிடங்களில் இம்மாதிரி ஏமாற்றம் நடந்திருக் கிறது. இதைத் தவிர்ப்பதற்காகத்தான் கன்னியாகுமரி சட்டத் தில் ஆயிரம் ரூபாய் சீட்டு நடத்தினால் ஆயிரம் ரூபாய் செக்யூ ரிடியோ, அதற்கு இரண்டு மடங்கு பெறுமானமுள்ள ஸ்தாவர சொத்தோ ஜாமீன் கொடுக்கவேண்டும் என்று இருக்கிறது. ஆனால் அங்கமாதிரி வைத்துக்கொள்வதில் இங்கு என்ன கஷ்டம் வந்து விடும் என்று தெரியவில்லை. பலர் எதிர்த்ததின் காரணமாக பாதித் தொகை ஜாமீன் வைத்தால் போதும் என்றால் மற்றொரு பாதிக்கு

ஜாமீன் வேண்டாமா என்று கேட்கவிரும்புகிறேன். ஆயிரம் ரூபாய் சீட்டில் பத்து பேர்கள் சேர்ந்தால் பத்தாயிரம் புரளுகிற போது ஆயிரம் ரூபாய்கூட ஜாமின் கட்ட முடியாது என்று சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆகவே முழு ஜாமின் இருக்கவேண்டும் என்று இருப்பதுதான் நல்லது. இருந்தாலும் முதன்முதலாக இங்கே இந்தச் சட்டம் வருவதால் படிப் படியாக இதைத் திருத்தலாம் என்று கருதுகிறேன். மேலும் ஜாமீன் கட்டுவதற்குப் பதிலாக ப்ராமிசரி நோட்டு எழுதிக் கொடுப்பது என்கிற வழக்கம் இருப்பதாகச் சொன்னார்கள். ஆகவே அதையும் பரிசீலனை செய்து சட்டத்தில் இடமளிக்கப்பட்டிருக்கிறது.

இன்னொன்று. நமது இலாகா ஆடிட்டர்கள் அந்த அந்தப் பிரதேசத்தில் உள்ளதை ஆடிட் செய்வார்கள். அப்படி ஆடிட் செய்வதிலே பல வழக்குகள் வந்திருக்கிறது என்று கருதுகிறேன். அதற்காக ஆடிட் பீஸ் வசூல் பண்ணிவிட்டால் நல்லது, அதற்காக வரி வசூலிக்கக்கூடாது என்று வழக்குகள் ஏற்பட்டன. நான் கூட அப்படிக் கருதுகிறேன். ஆடிட் பீஸ் வசூல் செய்யலாம். ஆனால் வரி விதிப்பது நியாயமாக இருக்காது.

இதுபோல் ஆடிட் செய்வதிலே என்ன திருத்தம் கொண்டுவந்திருக்கிறோம் என்றால் ரிஜிஸ்ட்ராரோ அல்லது அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட ஆடிட்டரோ இல்லையென்றால் சார்ட்டர்ட் அக்கவுண்டண்ட் என்ற டிகிரி வாங்கியுள்ள யாராவது இருந்தாலும்சரி அவர்கள் ஆடிட் செய்தால் போதுமானது என்று கருதக் கூடிய திருத்தம் முக்கியமானது என்று நான் கருதுகிறேன். இதைப்பற்றி நான் பாராட்டுகிறேன். 10-30 a.m.

இதற்கு முன்பாக பேசிய நண்பர் எக்ஸாமினேஷன் ஆப் ரிகார்டுகளைப் பற்றி குறிப்பிட்டார். சீட்டில் சேர்ந்திருக்கக் கூடியவர்கள் புள்ளிவிவரங்களையும் தஸ்தாவேஜுகளையும் பார்வையிடவேண்டுமென்றால் திருத்தப்பட்ட மசோதாவிலே 5 ரூபாய் கட்டணம் செலுத்தவேண்டுமென்றிருக்கிறது. இந்தத் தொகை சற்று ஜாஸ்தியாகப் போய்விட்டதோ என்று கருதுகிறேன். அவர்கள் பணம் செலுத்தியதுபற்றிய கணக்கு சரியாக கொடுக்கப் பட்டிருக்கிறதா என்று பார்க்க வேண்டுமானால் அற்கும்கூட கட்டணம் கட்டவேண்டியிருக்கிறது. கம்பெனி சட்டத்தின்படி ஒரு அங்கத்தினர் நோட்டீஸ் கொடுத்துவிட்டு பார்த்துக்கொள்ளலாம் என்றிருக்கிறது. ஆகையால் சீட்டில் சேர்ந்திருப்பவர்கள் ஆபீஸ் நேரத்தில் ஒரு ரிகார்ட் பார்க்கலாம் என்றால், ஏதோ ஒரு ரூபாய் கட்டணம் வைக்கலாம். ஐந்து ரூபாய் என்பது அதிகம் என்று எனக்குத் தோன்றுகிறது. இவைகளையெல்லாம் பரிசீலனை செய்யவேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRIMATHI RAJATHI KUNJITHAPATHAM: கனம் தலைவர் அவர்களே, இந்த சீட்டு மசோதாவை நான் முழுமனதுடன் வரவேற்று ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சீட்டு

கட்டுவதனுல் நாட்டில் உள்ளவர்களுக்கு என்ன நன்மை என்பதைப் பற்றி நான் அதிகம் சொல்லவேண்டியதில்லை. நம் நாட்டிலே ஒருவர் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டார்களானல் உடனே பக்கத்தில் இருப்பவர்களானுலும்சரி, அவர்களிடம் சிரத்தை உள்ளவர்களானுலும்சரி, அவர்களிடம் சென்று "ஏதாவது சீட்டு நாட்டு போடுகிறீர்களா? ஏதாவது சேமிப்பு செய்கிறீர்களா?" என்று கேட்கின்ற பழக்கம் பழங்காலந்தொட்டு வந்திருப்பதாகும். சேமிப்பு இயக்கத்தை நம்மவர்கள் மனதிலே அளிக்கக் கூடியது சிட்டுமுறையாகும். சீட்டு முறை இந்த நாட்டில் உள்ளவர்களுக்கு எத்தனையோ நன்மை செய்து வந்தது என்பதை மறைப்பதற்கோ, மறுப்பதற்கோ முடியாது. கடன்வேலையானுலும்சரி, கல்யாண நெருக்கடியானுலும்சரி, இந்தச் சீட்டினுல் மக்கள் எவ்வளவோ நன்மையை அடைந்திருக்கிருர்கள். ஆனல் இந்தச் சீட்டு சேர்ப்பவர்கள், அவர்களிடம் சீட்டுபோடுகிறவர்கள் இரண்டுபேரும் ஒவ்வொரு கட்டத்தில் ஏமாற்றப்பட்டிருக்கிருர்கள் என்பதை நாம் மறுக்க முடியாது. ஆகையால் இம்மாதிரி மசோதா நமக்கு மிகவும் அவசியம், அவசரமும்கூட. இதைத் துணிந்து அரசாங்கம் இந்த சமயத்தில் கொண்டுவந்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்க அம்சமாகும். சட்டதிட்டங்கள் அதிகமாக வரவர, கட்டுப்பாடு அதிகமாக வரவர இந்தத் தொழில் நசித்துவிடும் என்ற அச்சம் தெரிவிக்கப்பட்டது. கட்டுப்பாட்டுடன் எந்தத் தொழில் அதிகமாக வளர்கிறதோ, அதுதான் இரு தரப்பாருக்கும் நன்மை தரக்கூடிய நல்ல தொழிலாக இருக்கும் என்பதை நினைவூட்ட விரும்புகிறேன். சீட்டு பிடிக்கிறவர்களானுலும்சரி, சீட்டிலே சேர்ந்திருப்பவர்களானுலும்சரி, அவர்கள் அதிக கஷ்டத்திற்கும் நஷ்டத்திற்கும் உள்ளாகி இருக்கிருர்கள், என்ற கடந்தகால சம்பவத்தை நினைவூட்ட விரும்புகிறேன். ஆகையால்தான் இந்த மசோதா பயன்தரத்தக்க மசோதா என்று குறிப்பிட விரும்புகிறேன். அதோடுகூட மக்களுடைய பிரதிநிதித்துவம் வாய்ந்த சங்கங்கள், இதசம்பந்தப்பட்ட பிரதிநிதிகளும் மாநாடுகள் நடத்தி அவ்வப்போது அமைச்சருக்கு எடுத்துச்சொல்லியிருக்கிருர்கள். மதுரையில் சீட்டு நடத்துகின்ற கம்பனியைச் சேர்ந்தவர்கள் ஒரு மாநாடு கூட்டினுர்கள். அதில் தீர்மானமும் போட்டார்கள். அதில் அவர்கள் சொன்னபடியே ஷரத்தையும் அமைச்சர் அவர்கள் சேர்த்திருக்கிருர்கள். அதுவும்தவிர, சீட்டுக் கம்பெனிகளில் ஒவ்வொருவரும் நேரில் வந்து அவர்களுடைய குறையை எடுத்துச் சொல்லியிருக்கிருர்கள். ஆகையால் சீட்டில் சேர்கிற பொதுமக்களுக்கும் நன்மை தரத்தக்க அளவிலே வந்திருக்கிறது.

செக்யூரிடி விஷயமாகச் சொன்னுர்கள். எனக்குத் தெரிந்த வரை நான் சொல்லமுடியும் 4,000 ரூபாய், 5,000 ரூபாய் வரை சீட்டுப் போடுகிறவர்கள் தங்களுடைய குழந்தைக்குக் கல்யாணத்திற்கு உதவும் என்றிருந்தார்கள். ஆனல் இந்த ரூபாய் கொடுக்க

31st January 1961] [Srimathi Rajathi Kunchithapatham]

வேண்டிய சமயத்தில் போர்மென் என்று சொல்லக்கூடியவர்கள் இருக்கும் இடம் தெரியாமல் போய்விடும் நிலைமை அனேக இடங்களில் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் மூலம் எத்தனையோ குடும்பங்கள் நசித்து நாசமாகி இருக்கின்றன. இதுபோல் சப்ஸ்கிரைபர்ஸ் என்று சொல்லக்கூடியவர்கள் சீட்டை எடுத்தவுடனே சீட்டு பிடித்தவர்களை அதோகதியாக்கிவிட்டு இருக்கும் இடம் தெரியாமல் போன பல கேஸ்கள் நமக்குத் தெரியும். ஆகவே தக்க வகையிலே போர்மென் செக்யூரிடி கொடுக்கவேண்டுமென்று சொல்வது மிகவும் வரவேற்கத்தக்க அம்சம் ஆகும்.

பாதித் தொகை அவர்கள் செக்யூரிடியாகக் கொடுத்தால் போதும் என்று சொல்வது மிகவும் பொறுத்தமானது. முழு செக்யூரிடி கட்ட வேண்டாம், பாதி கட்டுவது போதுமானது என்ற திருத்தம் கொண்டுவந்திருப்பதாக அறிகிறோம். ஒருவர் ஒரு கம்பெனியை வைத்துக்கொண்டு ஒரு சீட்டு இரண்டு சீட்டுவரை தொழில் நடத்தமுடியாது. அவர்களுக்குக் கட்டுபடியாக வேண்டுமானால் அதிகமான சீட்டுகள் வைத்து நடத்த வேண்டும். அப்போது அவர்கள் 10,000, 20,000 ரூபாய் டெபாசிட் கட்டவேண்டுமானால் அந்த பணம் வட்டியில்லாமல் முடக்கப்படவேண்டியிருக்கும், அந்தத் தொழிலில் இருக்கின்றவர்கள் கஷ்டப்படுவார்கள் என்பதைக் கவனத்தில் கொண்டு, பாதித் தொகை கட்டினால் போதும் என்று குறிப்பிட்டிருப்பது மிகவும் நல்ல அம்சமாகும் என்று கருதுகிறேன்.

சீட்டுப் போடுகிறவர்கள் பிராமிசரி நோட்டு எழுதிக்கொடுப்பதோடு சொத்தையும் அடமானம் கேட்கிறார்கள். எனக்குத் தெரிந்தவரை, சீட்டு சேர்ப்பவர்களிடம் சீட்டு எடுத்தவர்கள் பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுக்கிறார்கள் என்றால், எவ்வளவு தொகைக்கு எழுதிக் கொடுக்கிறோம் என்பதைககூட கவனியாமல் கையெழுத்துப் போடச்சொன்ன இடத்தில் போடுகிறவர்களும் உண்டு. நாலாயிரம், ஐயாயிரம் ரூபாய் சீட்டு எடுத்திருப்பார்கள். ஆனால் அவர்களுடைய 10,000 ரூபாய் பெருமானமுள்ள சொத்தைக்கூட ஜாமீன் அடமானமாக வைத்து, சீட்டுக்காரர்களுக்கு எழுதிக் கொடுக்கும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது. இம்மாதிரியான நிலைமையில் இருந்து அவர்கள் தப்பமுடியாமல் இருநதிருக்கிறது. ஏனென்றால் அவர்களுக்கு பண உதவி வேண்டுமென்ற நெருக்கடியான சமயத்தில்—வியாபாரிகளாகயிருக்கலாம், மற்றவர்களாக இருக்கலாம் பணம் வேண்டியிருக்கும். அவர்களிடம் இருக்கும் ரூபாயோடு இன்னும் கொஞ்சம் சேர்த்து ஒரு சிறு சொத்து வாங்கக்கூடியவர்களாக இருக்கலாம், அவர்களுக்குக் கடன் கொடுக்கிறவர்கள் அவர்கள் கண்ணுக்கு கடவுளை விட அதிகமாகத் தோன்றுவதால் அவர்கள் காட்டுகிற இடத்தில் கையெழுத்துப் போடவேண்டிய நிலைமைக் குள்ளாகிறார்கள்.

இந்த நிலைமையைப் போக்குவதற்கு பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுத்தால் கொடுக்கவேண்டிய தொகை அளவிற்கு எழுதிக் கொடுத்தால் போதும் என்று இருப்பது வரவேற்கத்தக்க

விஷயமாகும். கனம் அங்கத்தினர் ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் திருத்தம் கொடுத்ததாகத் தெரிகிறது. அதை நான் வரவேற்கிறேன். இனி கட்டவேண்டிய சப்ஸ்கிரிப்ஷனுக்கு அவர்கள் பிராமிசரி நோட்டு வாங்கவேண்டுமென்றிருந்தால நன்ருக இருக்கும். எதிர்காலத்தில் கொடுக்கவேண்டிய பணத்திற்கு மட்டும் பிராமிசரி நோட்டு எழுதிக்கொடுக்கவேண்டுமென்று குறிப்பிட்டிருந்தால் மிகவும் நன்ருக இருக்கும். அது மக்களுக்கு மிகவும பாதுகாப்பு உள்ளதாக இருக்குமென்று நினைக்கிறேன்.

ஸ்ரீ டானியல் அவர்கள் சொல்லியபடி 36-வது ஷரத்துப்படி 12 வருஷங்களுக்கு இந்த ரிகார்டுகள் வைத்து இருக்கவேண்டுமென்று சொல்லுவதுகூட சீட்டு சேர்ப்பவர்களுக்கு மிகவும் தொந்திரவு கொடுக்கக்கூடியதென்று நான் நினைக்கிறேன். ரெவின்யூ ரிகார்ட் கூட 6 வருஷத்திற்கு மேலே எரிக்கப்படுகிறது. அப்படி இருக்க சர்க்கார் 12 வருஷம் என்று வைத்திருப்பது இந்தத் தொழிலே மேலும் நசுக்கக்கூடியதாக இருக்கிறது. ஆகையால் 12 வருஷம் என்பதை குறைத்துக்கொண்டால் நல்லதென்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சிறு சீட்டு வைத்து நடத்துகிறவர்கள், ரிஜிஸ்ட்ரேஷன் பண்ண வேண்டியதில்லை என்று குறிப்பிட்டிருப்பது நல்ல அம்சம். நூறு ரூபாய்க்கு கீழ் சீட்டு நடத்துபவர்கள் ரெஜிஸ்ட்ரேஷன் பண்ண வேண்டாமென்று தவிர்த்திருப்பதானது நல்ல அம்சம் ஆகும். முக்கியமாக ஊர்களில் எடுத்துக் கொள்வோமேயானல் பெண்கள் சீட்டு நாட்டு போடுவது வழக்கம். வரவுசெலவுக்கு கொடுக்கும் பணத்தை, வீட்டுச் செலவுக்கென்று தன்னிடத்தில் கொடுக்கும் பணத்தை மிச்சம்பிடித்து, சீட்டு நாட்டு போட்டு, நகை நட்டு செய்துகொள்வது வழக்கம். இம்மாதிரி சிறு சேமிப்பு அவசியம். சீட்டு இயக்கம் முக்கியமாக பெண்களிடத்தில் இருந்து வருகிறது. ரூ. 50, ரூ. 100 அளவிற்குச் சீட்டு சேர்க்கும் பழக்கம் இப்பொழுதும் இருக்கிறது. மாதம் 30 ரூபாய் சம்பாதிக்கிறவர்கள்கூட 2 ரூபாய், 3 ரூபாய் மாதத்திற்குச் சீட்டு போடுவது வழக்கம். இம்மாதிரி சீட்டு போடுகிறவர்களுக்கு இதிலே கட்டுப்பாடு இல்லாததினுல் 100 ரூபாய்க்குக்கீழ் சீட்டுபோடுகிறவர்களுக்கு இந்தச் சட்டத்தில் பாதுகாப்பு இருக்கிறது. இதை நான் வரவேற்கிறேன்.

பதினுலாவது கிளாசில் போர்மென் செக்யூரிட்டி வாங்கிக் கொண்டு கொடுத்து விடவேண்டுமென்று இருக்கிறது. அநேக யிடங்களில் சீட்டு கட்டியவர்கள் சொந்த சொத்து ஜாமீன் கொடுக்க முடியாத ஒரு நிலேயில் அல்லது அவர்களிடம் வேறு எந்த வழிவகையும் இல்லாததால் அவர்கள் கட்டிய சீட்டை எடுக்க முடியாத நிலேயில் பலர் இருக்கிருர்கள். அவர்கள் எடுத்திருக்கக் கூடிய சீட்டுத் தொகை கூட மறுக்கப்பட்டிருக்கிறது. அந்த நிலேயைத் தவிர்க்க செக்யூரிட்டி எந்த ரூபத்தில் கொடுத்தாலும் உடனே பணம் கொடுக்கப் பட வேண்டும் என்று கண்டு இருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. இந்த மசோதா பொதுவாக

31st January 1961] [Srimathi Rajathi Kunchithapatham]

மக்களுக்கு நன்மை செய்யக்கூடியதொன்று. ஒன்றிரண்டு திருத்தங்கள் கொடுத்திருப்பதையும் அரசாங்கம் ஏற்றுக்கொண்டால் இது பூர்த்தியான ஒரு மசோதாவாகிவிடும். இது வருவதால், சட்டதிட்டங்கள், கட்டுப்பாடுகள் அதிகமாக இருப்பதால் இந்த தொழில் நசித்து விடுமென்று அச்சப்படுவதற்கில்லை. அல்லது இது மைசூர் போன்ற வேறு பிற மாகாணங்களுக்கு போய்விடு மென்று சொல்வதற்கில்லை. இந்தத் தொழில் இப்படிப்பட்ட கட்டுத்திட்டங்கள் இல்லாத பிற மாநிலங்களுக்குப் போய்விடும் என்று பயப்பட தேவையில்லை. சீட்டு என்பது அந்தந்த லொக்காலிட்டியிலுள்ள மக்களைப் பொறுத்தது. ஆயிரம் மைல் களுக்கு அப்பால் இருக்கிறவர்கள் 100 அல்லது 200 ரூபாய் சீட்டு சேருவதற்கு இங்கு வந்து கான்வாஸ் செய்யப் போவதில்லை. நிறைய செல்வம் இருக்கிறது என்பதை நம்பி யாரும் ஒருவரிடமும் சீட்டு சேருவதில்லை. சீட்டு நடத்துகிறவரின் நாணயத்தை நம்பித்தான் சீட்டில் சேருகிற பழக்கம் நம் நாட்டில் வெகு காலமாகவே இருந்து வருகிறது. ஒருவரிடம் செல்வம் இல்லாமல் இருக்கலாம், ஆனல் நாணயம் அவரிடம் இருந்தால் அந்த நாண யத்தை நம்பி சீட்டில் சேர்ந்து அவருக்கு ஒத்துழைப்பு கொடுத்திருக்கிருர்கள் பொதுமக்கள். அதனல் பலனும், பயனும் அடைந்து இருக்கிருர்கள். ஒரு கம்பெனியிருக்கிறது, கோடிக் கணக்கில் காப்பிட்டல் வைத்திருக்கிருர்கள் என்பதற்காக சீட்டில் சேர்ந்து விடமாட்டார்கள். நாணயத்தை வைத்துத்தான் சேரு கிருர்கள். ஆக நாணயத்தைப் பொறுத்தே இந்நாட்டில் சீட்டு, சேமிப்பு இயக்கம் வெகுநாட்களாக, நெடுநாட்களாக நடந்து கொண்டு வந்திருக்கிறது. சீட்டென்பது, பணக்காரராகயிருந் தாலும்சரி அல்லது அவர் கீழ் வேலை செய்யும் பண்ணையாளாக இருந்தாலும் சரி, பணக்காரர் 1,000 ரூபாய் சீட்டு கட்டினல், அவர் கீழ் வேலை செய்யும் பண்ணையாள் மாதம் 30 ரூபாய் சம்பாதித்தால் 3 ரூபாய் சீட்டு கட்டுகிருர். இந்த சீட்டு கட்டும் முறை ஒரு நல்ல அம்சமாகும். இந்த மசோதா மிகவும் அவசரமானதும் கூட. ஆக தக்க சமயத்தில் இதை அரசாங்கம் கொண்டு வந்திருப் பது குறித்து, அரசாங்கத்தை நான் மனப்பூர்வமாக பாராட்டி இந்த மசோதாதை வரவேற்று என் பேச்சை முடித்துக்கொள் கிறேன்.

* **SRI M. S. SELVARAJAN:** கனம் சபாநாயகர் அவர்களே, வந்திருக்கக்கூடிய மசோதாவை நான் ஆதரிக்கிறேன். எனக்கு முன் பேசிய அங்கத்தினர் கனம் ராஜாத்தி அவர்கள், இந்த சீட்டு முறை கிராமத்திலுள்ள மக்களுக்கு எவ்வளவு உதவிகரமாயிருக் கிறது என்பது பற்றி விஸ்தாரமாகச் சொன்னுர்கள். இன்றைய தினம், கிராமங்களில் சிறு சேமிப்பிற்காக அரசாங்கத் தரப்பில் எவ்வளவோ நடவடிக்கைகள் எல்லாம் எடுக்கப்பட்டு வருகின்றன. கிராமங்களிலுள்ள சிறிய போஸ்ட் ஆபீஸ்களில் போட்டு வைக்கக் கூடிய வசதி, சிறு தொகைகளை அரசாங்க சேமிப்புப் பத்திரங் களில் வழி சேர்த்து வைப்பது போன்ற முயற்சிகளை எல்லாம் இன்று தொடங்கியிருக்கிருர்கள், சில காலமாக தொடங்கப் பட்டிருக்கிறது. ஆனல் பாரம்பரியமாக கிராமங்களில் யாரும்

சொல்லாமலேயே இத்தகைய சேமிப்பு ஊக்கம் ஏற்பட்டு கிராமங்களிலுள்ள ஏழை எளியவர்கள் முதற்கொண்டு இந்த வழக்கத்தை அவர்களோகவே தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கு இந்தச் சீட்டுமுறை அனுகூலமாக இருக்கிறது. கல்யாணம் நடத்துவதற்கு, வேறு நல்ல காரியங்கள் செய்வதற்கு, சிறு சிறு தொழில்கள் செய்வதற்கு இப்படி ஏதாவது செய்வதற்கு கூட்டாக எல்லோரும் சேர்ந்து சீட்டு கட்டி மொத்தமாக கிடைக்கும் பணத்தைக்கொண்டு தொழில் ஆரம்பிப்பது அல்லது வேறு காரியங்கள் செய்வது, பின்னர் நாளாவட்டத்தில் அதைக் கட்டி விடுவது என்ற முறை நாணய அடிப்படையில் பல காலமாக இருந்துகொண்டிருக்கிறது. இத்தகைய நாணயத்திற்கு பங்கம் வராமலிருக்கக் கூடிய நிலையை வலியுறுத்த வேண்டிய பொறுப்பு அரசாங்கத்திற்கு இருக்கிறது. நாணயம் இரு தரப்பிலும் பாதுகாக்கப் படவேண்டும். நாணயத்தைப் பாதுகாப்பதற்கு, இரு தரப்பிலும் பாதுகாப்பதற்கு வசதி செய்வதுதான் அரசாங்கத்தின் நோக்கம். அதற்காகத்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது என்றுதான் நான் கருதுகிறேன். சிறிய அளவில் இந்தத் தொழில் செய்பவர்களுக்கு சட்டதிட்டங்களே வேண்டாம், நாணயமே போதும் என்றுதான் அரசாங்கம் கருதுகிறது. ஆனால் 100 ரூபாய்க்கு உட்பட்டு சீட்டு நடத்தக்கூடியவர்கள் அல்லது சீட்டு பதிந்து கொள்ளக்கூடியவர்கள் இவர்களையெல்லாம் சட்ட திட்டங்களுக்கு உட்படுத்த வேண்டியதில்லை, இவர்கள் ரெஜிஸ்டர் செய்யவேண்டியதில்லை, அவர்களுக்கு விலக்கு அளிக்கப்படுகிறது என்று மட்டும் காணப்படுகிறது. நான் ஒரு சந்தேகம் தெரிவிக்க விரும்புகிறேன். நூறு ரூபாய் என்பதில் தொகை மட்டும் குறிப்பிட்டு விட்டால் போதுமானதல்ல. ஏனெனில், தினம் ஒன்றுக்கு 100 ரூபாய் சீட்டு நடத்தக்கூடியவர்கள், இந்த சட்ட திட்டங்களுக்கு உட்பட்டவர்களா இல்லையா என்பதுபற்றி அரசாங்கம் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அரசாங்கம் 100 ரூபாய் என்று விதித்திருக்கிறபோது, மாதாந்திரச் சீட்டு நடத்தக்கூடியவர்கள் 100 ரூபாய்க்கு மேற்படாமல் இருந்தால் அவர்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்றுதான் நினைக்கிறேன். நூறு ரூபாய் என்று மட்டும் குறிப்பிட்டால் போதாது. கால அளவை நிர்ணயிக்காமல் இருந்தால் அந்தச் சீட்டு தினமா, வாரமா அல்லது இரண்டு வாரத்திற்கு ஒரு முறையா என்ற சந்தேகம் எழலாம். பார்வைக்கு சிறிய அளவில் இருந்தாலும் பெருந்தொகை அடங்கக்கூடியதாகயிருக்கும். அரசாங்கம் நாலைந்து விதமான ஜாக்கிரதை சீட்டு பிடிப்பவரிடம் கொண்டிருக்கிறது. சீட்டு நடத்துகிறவர், கூட்டுறவு சட்டதிட்டங்கள் போன்று அதன் சட்ட திட்டங்கள் என்ன, என்னென்ன நிபந்தனைகள் உள்ளன என்று வலியுறுத்தி சட்ட திட்டங்கள் வகுத்துக் கொடுக்க வேண்டும். இது முதல் வேலை. சட்ட திட்டங்கள் வகுத்துக் கொடுத்த பிற்பாடு அதைத் தொடர்ந்து யார் எல்லாம் சேர்க்கப் படுகிறார்கள்? அவர்கள் நிலை எல்லாம் என்ன? என்று இரு தரப்பிலும் ஒரு ஒப்பந்தத்திற்கு வர வேண்டும். அந்த ஒப்பந்தத்தில், செலக்ட் கமிட்டியினர் நல்ல மாறுதல்கள் செய்திருக்கிறார்கள் என்பது என் அபிப்பிராயம். ஆரம்பத்தில் இருந்தது

போல் எல்லோரும் சேர்ந்து ஒரு ஒப்பந்தம் செய்யவேண்டும், அந்த ஒப்பந்தப் பத்திரத்தில் எல்லோரும் சேர்ந்து கையெழுத்து இடவேண்டுமென்று இருந்திருந்தால் ஒரு குறிப்பிட்ட இடத்தி லுள்ளவர்கள் மட்டும்தான் ஒரு சீட்டில் சேர்ந்து கொள்ள முடியும். தூரத்தில் இருப்பவர்கள், வெளிநாட்டில் இருப்பவர்கள் உள்பட இதுபோன்ற வசதிகள் பெற்றுக்கொள்ள முடியாமல் போகும். ஆகவே செலக்ட் கமிட்டியினர் ஜாக்கிரதையாக, தனித் தனியாக ஒப்பந்தம் செய்துகொண்டாலும் நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு தனித்தனியாக சீட்டுப் பிடிப்பவர்களும், சீட்டு போடுபவர்களும் ஒப்பந்தம் செய்துகொண்டால் போதுமானது என்று நல்ல மாறுதல் செய்திருக்கிறார்கள். சட்ட திட்டங்கள் உண்டாக்கி விட்டால், அதைக் காட்டி ரிஜிஸ்தர் செய்து கொள்ள வேண்டும். அதற்குப் பின்னர் ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும், பின்னர் எப்பொழுது ஆரம்பிக்கிறார்கள் என்ற நிபந்தனையிருக்கிறது, அது எப்பொழுது என்பது நிச்சயமாக தெரிந்து அத்தேதியைக் குறிப்பிட்டு அதற்குரிய ஒரு சர்டிபிகேட் பெற்றுக்கொள்ளவேண்டும். இதோடு டெப்பாஸிட்டும் கட்ட வேண்டும். பின், சீட்டு நடந்த முடிவை அரசாங்க அதிகாரி களுக்கு தெரிவிக்கவேண்டும். ஜாக்கிரதையாக இருப்பதற் காகத்தான் இத்தகைய நாலைந்து "ப்ரோஸஸ்" களை கடந்து செல்லவேண்டுமென்று நிபந்தனையை அரசாங்கம் விதித்திருக் கிறது.

இந்த நாலைந்து வித முறைகள் போதுமானது. இதையும் மீறி தவறு செய்பவர்களுக்கு தண்டனை கொடுக்கக்கூடிய பல பீனல் கிளாஸ்கள் இருக்கின்றன. இதைவிட ஏன் இவர்களிடத்திலிருந்து முழு அளவுக்கு டெப்பாஸிட் வாங்கக்கூடாது என்பதுதான் என் யோசனை. பத்து பேர்கள் சேர்ந்து ஒருவருக்கு 100 ரூபாய் என்று வைத்துக்கொண்டால் 1,000 ரூபாய் டெப்பாஸிட் வேண்டும் என்று யாரும் கேட்கலாம். இம்மாதிரியான சீட்டு நடத்தக் கூடியவர்களிடத்தில் ஆயிரம் ரூபாய் போக்கு வரவு இருக்கும். ஆகவே. ஆயிரம் ரூபாய் ஏன் டெப்பாஸிட் கட்டக்கூடாது என்று நினைக்கக்கூடியவர்கள் இருக்கலாம். ஆரம்பத்தில் அரசாங்கம் சீட்டில் சேர்ந்திருப்பவர்களுக்கு பாதுகாப்பு வேண்டும் என்பதற்காக ஒன்றிரண்டு மடங்கு டெப்பாஸிட் கட்டவேண்டும் என்று நிர்ப்பந்தம் விதித்திருந்தார்கள். இது இப்போது கணிசமான அளவில் குறைக்கப்பட்டிருக்கிறது. அதாவது 50 சதமானம் போதும் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் நிர்ணயிக்கிறபொழுது அரசாங்கம் ஒன்றை கவனிக்க வேண்டும். இவ்விதம் 50 சதமானம் தொகை டெப்பாஸிட்டாக வாங்கிவிட்டால் சீட்டு நடத்தக்கூடிய கரஸ்வானை கட்டுப்படுத்து வதற்கு போதுமானது என்று யாரும் நினைக்கமாட்டார்கள், அவ்விதம் நினைக்கவும் கூடாது. ஒரு தவணையில் யாராவது தவறு செய்தால் இதை ஆதாரமாகக் கொள்ளலாம் என்பது தான் அரசாங்கத்தினுடையவும், செலக்ட் கமிட்டியினுடையவும் கருத்து என்று நான் கருதுகிறேன். இதன் மூலம் யாராவது சட்டபூர்வமாக தப்பு செய்து விட்டாலோ அல்லது தவறு செய்து விட்டாலோ இந்த டெப்பாஸிட் மூலம் இவர்களை கட்டுப்படுத்தி

விடலாம், சீட்டுக்கு பணம் செலுத்தி தடுமாறி நிற்கும் எல்லோருக்கும் இதன் மூலம் பணத்தை விநியோகிக்கலாம் என்று யாரும் எதிர்பார்க்க முடியாது. இதற்கு இந்த தொகையும் காணாது. ஆகவே செலக்ட் கமிட்டியினர் செய்திருக்கிற இந்த மாறுதல் பிரகாரம் போடப்பட்டிருக்கிற நிபந்தனைகளே போதும் என்று கருதுகிறேன். இதை அதிகப் படுத்த வேண்டிய அவசியமுமில்லை என்று நினைக்கிறேன். ஆனால் சீட்டு நடத்தக்கூடியவர்களை கட்டுப்படுத்த வேண்டும் என்று நினைக்கிற அதேநேரத்தில் சீட்டை ஒழுங்காக நடத்தி வருவதற்கு சீட்டு போட்டிருக்கின்றவர்களும் ஒழுங்காக பணம் செலுத்து வதற்கும் நாம் கவனம் செலுத்தவேண்டும். சீட்டை கடைசி வரை சரியாக நடத்த வேண்டுமென்றால் சீட்டில் சேர்ந்திருப் பவர்கள் கடைசிவரை சரியாக ஒழுங்காக பணம் செலுத்தினால் தான் சரியாக முடிக்க முடியும் என்பதைக் கருதி அதற்குரிய நிபந்தனைகள் பலவற்றையும் விதித்திருக்கிறார்கள். ஒருதரம் சீட்டை பிடித்தவர்கள் பணம் செலுத்துவதற்கு தவறினால் அதன் மூலம் ஏற்படுகின்ற கோர்ட் செலவையும் அந்தத் தொகைக்கான வட்டியையும் செலுத்தவேண்டும் என்றெல்லாம் நிபந்தனைகள் இருக்கின்றன. என்றாலும்கூட இது போதுமானதல்ல என்பது எனது கருத்து. சீட்டு எடுத்தவர்கள் பின்னால் பணம் செலுத்தத் தவறுவார்களானால் அதை பின்னால் கோர்ட் மூலம் வசூல் செய்யும் போது கொடுத்து விடுகிறார்கள். இப்போது அந்த மாதம் வரை எவ்வளவு கொடுக்க வேண்டுமோ அதைத்தான் கொடுக்கிறார்கள். நான் கருதுவது, அவர்களிடத்தில் இன்னும் கண்டிப்பான முறையில், அவர்கள் தவணை செலுத்தியது போக பின்னால் பாக்கி யிருக்கக்கூடிய எல்லாத் தவணைகளுக்கும் சேர்த்து ஒரேயடியாக செலுத்துவதற்கு வழிவகை செய்யவேண்டும் என்பதுதான், இதற்காக நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதில் எந்த விதமான தவறும் இல்லை என்று எண்ணுகிறேன். இல்லையென்றால் சீட்டு கட்ட தவறிவிட்டு பின்னால் இதற்கான நடவடிக்கை வரும் போது செலுத்திக்கொள்ளலாம் என்று இருந்து விடுவார்கள்.

இதைப் பின்பற்றி மற்றவர்களும் இருந்து விட்டால் சீட்டை எவ்வாறு ஒழுங்காக நடத்த முடியும் என்பதை நாம் யோசனை செய்யவேண்டும். இதை நினைக்கிறபொழுது தவணை கட்டத்தவறி யவர்களை கண்காணிக்க நல்ல வழிவகை இருக்கவேண்டும். அது போலவேதான் சீட்டு நிபந்தனைபடி சீட்டை பிடித்துவிட்டு, பின்னால் அதற்கான ஆதாரங்கள் ஜாமீன்கள் கொடுப்பதற்குத் தவறினால் எந்தத் தொகைக்கு சீட்டு எடுக்கப்பட்டதோ அந்தத் தொகையை பாங்கியில் செலுத்த வேண்டும் என்று செலக்ட் கமிட்டி திருத்தம் கூறுகிறது. நான் இதில் அபிப்பிராயப்படுவது என்னவென்றால், சீட்டு எடுக்கப்பட்டவருடைய பணத்தை பாங்கி யில் கட்டுவதற்கு நிபந்தனை விதிக்கிறோம். அப்படியில்லாமல் மறுமுறையும் சீட்டை நடத்த வேண்டும், அதில் முன் மாதத்தில் சீட்டு எடுத்தவரும் கலந்துகொள்ள அனுமதி வழங்க வேண்டும். இவ்விதம் முன் சீட்டையும் அந்த மாதத்தில் வழக்கம் போல் நடத்தக்கூடிய சீட்டையும் நடத்தவேண்டும், இதன் மூலமாக இரண்டு தரப்பினருக்கும் எந்தவிதமான குறையும்

31st January 1961] [Sri M. S. Selvarajan]

இல்லாமல் இருக்கும். அதோடு குலுக்குச் சீட்டு மூலமாகவோ அல்லது வேறு முறையிலோ சீட்டு எடுத்துக்கொள்வதற்கு இரு தரப்பினருக்கும் வாய்ப்பு கிடைக்கிறது. ஜாமின் கட்ட காலம் கடந்து விட்டாலும் கூட அவர்களுடைய சீட்டும் இதோடு சேர்த்து போடுவதால் அனுவசியமாக அந்தப் பணத்தை பாங்கி யில் போட வேண்டிய அவசியமும் ஏற்படாது. சீட்டு நடத்தக் கூடியவர்களுக்கும் சிரமமில்லாமல் இருக்கும் மற்றவர்களுக்கும் இந்த முறை மிக வசதியாய் இருக்கும் என்று கருதுகிறேன்.

மேலும், பாங்குகளைப்போலவே கம்பெனிஸ் ஆக்ட் பிரகாரம் ரெஜிஸ்டர் செய்த கம்பெனிகளை போய் பார்வையிட்டு வருவதற் காக இதில் வழிவகை செய்திருக்கிறார்கள். ஆனால் பெரும்பாலும் கிராமத்தில் சீட்டு நடத்தக்கூடியவர்கள் இதற்கென்று ஆபீஸ் வைத்திருக்க மாட்டார்கள். தங்கள் வீடுகளிலேயே சீட்டு சம் பந்தமான வேலைகளை நடத்தி வருவார்கள். அப்பேர்பட்ட இடங் களில் அதிகாரிகள் போய் பார்வையிடுவதற்கு வசதியில்லாமல் இருக்கலாம். ஆனால் பல இடங்களிலும் ரெஜிஸ்டர் செய்த கம் பெனிகள் தனியாக ஆபீஸ் ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். இந்த இடங்களில் அதிகாரிகள் போய் பார்வையிடுவதானால் அதற்காக ஒரு சிறிய கட்டணத்தை அவர்களுக்கு கொடுக்கலாம். அதிகாரி கள் எந்த இடத்திலும் போய் பார்வையிடுவதற்கு தயாராகத்தான் இருக்கிறார்கள். ஆனால் கிராமங்களில் அதற்கான வசதியில்லாமல் இருப்பதனால்தான் அவர்களை அதிகாரிகளிடத்தில் கணக்குகளை காண்பிக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ஆபீஸ் என்று தனியாக ஏற்படுத்தி குறிப்பிட்ட நேரத்தில் வேலை செய்துகொண்டிருக்கின்ற இடங்களில் இந்த அதிகாரிகளே சென்று பார்வையிடுவதாக இருந்தால், அவர்களுக்கு பெரிய சுமை என் றில்லாமல் சிறிய அளவில் நாமினலாக ஒரு கட்டணத்தை ஏற்படுத்திக்கொள்ளலாம். இதில் என்னுடைய கவலை என்ன வென்றால் பெரும்பாலும் ரெஜிஸ்டர் செய்த கம்பெனிகள் எல்லாம் தவறு செய்வார்கள் என்று நினைக்கவில்லை. ஆனால் கிராமத்தில் மற்றொன்று நடக்கிறது. அதாவது ஒருவருக்கு சீட்டு விழுந்து விட்டால் பின்னால் எந்தவிதமான தொகையும் எந்தத் தவணையிலும் செலுத்த வேண்டியதில்லை. இதை குலுக்கு முறையிலோ அல்லது வேறு முறையிலோ எடுத்துக்கொள்கிறார்கள். இவ்விதம் ஒரு குலுக்கில் விழுந்துவிட்டால் அவர்கள் பின்னால் பணம் கட்ட வேண்டிய அவசியமேயில்லை. இதனால் சீட்டு எடுக் காதவர்களுடைய தலையில் சுமை விழுகிறது. இவ்விதம் லாட்டரி போன்ற வகையில் நடந்துகொண்டிருக்கிறது. இதை கட்டுப் படுத்துவதற்கு எந்தச் சட்டத்திலும் இடமில்லை. சட்ட முறையில் நடத்திக்கொண்டிருக்கும் சீட்டுகளில் நடைபெறும் தவறுகளை கட்டுப்படுத்துவதற்கு இந்த மசோதாவில் வழிவகை செய்யப் பட்டிருக்கிறது. ஆனால் இதைவிட அதிகமான அளவில் தவறுகள் நடக்கக்கூடிய லாட்டரி போன்ற சீட்டுகளை கட்டுப்படுத்த நம் மிடம் எந்தவிதமான மசோதாவும் இல்லை. இதன் காரணமாக ஜனங்கள் அநியாயமாக கஷ்டப்படுகிறார்கள். ஆகவே இவர்களை கட்டுப்படுத்துவதற்கு அரசாங்கம் ஏதாவது ஒரு வழிவகை செய்யும் என்று நம்புகிறேன். முக்கியமாக சட்டப்படி சரியாக

நடக்கிறவர்கள் இதில் பயப்பட வேண்டிய தேவையேயில்லை. சட்டப்படி கட்டுத்திட்டங்களுக்கு உட்பட்டு யார் நடக்கிறார்களோ அவர்களுக்கு இந்த மசோதா நல்ல பாதுகாப்பு அளிக்கிறது. அதோடு கிராமத்திலுள்ள ஜனங்களுக்கு சேமிப்பு முறை பெருவாரியான அளவில் பயன்படக்கூடிய முறையில் இந்த மசோதா வழி செய்து கொடுக்கும் என்று கருதுகிறேன்.

1 00 a.m. ஆனால் ஒரு அச்சம் எனக்கு உண்டு. கிராமத்தில் இருக்கிற மக்கள் முதல் நகரத்தில் இருக்கிற மக்கள் வரையில் பெரிய சீட்டு நடத்துபவர்களுக்கு ஒரு நிபந்தனை வேண்டும். இஷ்டப்படி நாள் சீட்டு, வாரச் சீட்டு, மாதச் சீட்டு, 6-மாதச் சீட்டு என்று இப்படி பல சீட்டுக்களை ஒருவரே நடத்தலாம் என்றில்லாமல், இதற்கு ஒரு அளவு வேண்டும். எந்த அளவுக்கு சீட்டு நடத்தலாம் என்று தொகையை நிர்ணயம் செய்யும் முறையிலோ அல்லது குறிப்பிட்ட எண்ணிக்கை முறையிலோ ஒரு கட்டுப்பாடு அவசியமானது. ஒரு தனிப்பட்ட நபரோ அல்லது ஒரு கம்பெனியோ சீட்டு நடத்துவதில் எவ்வளவு நியாயமாக நடக்க விரும்பினாலும், பல சீட்டுகளை நடத்திக்கொண்டு அளவற்ற முறையில் போனால், அவர்களால் சுமக்க முடியாமல் போய்விடலாம். அவர்கள் நியாயமாக நடக்க விரும்பினால்கூட தவறுகள் ஏற்பட்டு விடலாம் என்று கருதுகிறேன். ஆகையால் இந்த அளவுக்கு ஒரு கட்டுப்பாடு மிகவும் அவசியமானது.

இது ஒரு நல்ல சட்டம், நல்ல வாழ்வு அளிக்க உதவும் என்று கருதி இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன்.

* SRI M. R. KANDASWAMI MUDALIYAR: கனம் சபாநாயகர் அவர்களே, சபையின் முன்பு கொண்டு வந்திருக்கக்கூடிய இந்த சீட்டு நிதி மசோதாவானது மிகவும் வரவேற்று போற்றுதற்குரிய மசோதா என்பதிலே யாருக்கும் சந்தேகம் இல்லை. நாம் இப்போது சிறு சேமிப்பு நிதி சேர்க்க பொதுமக்களிடையே பிரசாரம் செய்கிறோம். அந்த முறையிலேயே சிறிய வருவாய் உள்ளவர்களும் சிறிய தொகை சேர்த்து, மீதப்படுத்தி தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளக்கூடிய முறையில் ஒரு சிறந்த அம்சமாக எல்லா இடங்களிலும் பரவலான முறையில் நடந்து வருகின்றது. அதைப் பாதுகாக்கும் முறையில்தான் அரசாங்கமும் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறது. ஆனால் இந்த மசோதாவைக் கொண்டுவரக்கூடிய நேரத்தில் அரசாங்கம் ஏதோ வருவாயைக் கருதியோ அல்லது அரசாங்கத்திற்கு லாபத்தைக் கருதியோ கொண்டுவரவில்லை. சிறு சேமிப்பு முறையில் பிற்கால வாழ்க்கைக்கு ஒத்தாசையாக பணத்தைப் போட்டு இந்த சீட்டு நிதி நடத்தக்கூடிய முறையில், பணத்தைப் போடக்கூடியவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் முறையில் கொண்டு வருகிறோம். அந்தப் பாதுகாப்பு இல்லாததன் காரணமாக பல இடங்களில் பல பேர்கள் சீட்டுகளை நடத்தும்போது ஏலதாரர்களுக்குப் பணத்தைக் கொடுக்காமல் மோசம் செய்து பலர் ஏமாற்றம் அடைந்திருக்கின்றதன் காரணமாக அரசாங்கம் இதைத் தடுக்க, சட்ட ரூபமாக

31st January 1961] [Sri R. Kandaswami Mudaliyar]

அவர்களுக்கு பாதுகாப்புக் கொடுக்க இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள். அரசாங்கத்தின் லாபத்தைக் கருதி இதைக் கொண்டுவரவில்லை.

இப்போது வந்திருக்கக்கூடிய முறையில் பார்த்தால் ஒரு நபர் 1,000 ரூபாய்க்கு சீட்டு நடத்தினால் 500 ரூபாய் ஜாமீனாக பாங்கில் கட்டவேண்டும் என்ற நிபந்தனை விதித்திருக்கிறார்கள். இந்த சீட்டு நடத்தக்கூடியவர்களெல்லோரும் பெரிய அளவில் தொகை வைத்துக்கொண்டு நடத்துகிறார்கள் என்று நாம் எண்ண முடியாது. சிறிய அளவில் கையில் பொருள் இருந்தாலும், நாணயத்தின் பேரில் நம்பிக்கை வைத்துத்தான் பணத்தைப் போடுகிறார்கள். அப்படிப் பார்க்கும்போது 50 ரூபாய் டெபாஸிட் கட்டவேண்டுமென்று சொல்லியிருப்பதை கொஞ்சம் குறைத்தால் நலமாக இருக்கும் எனக் கருதுகிறேன். இப்போது பல நண்பர்கள் சொன்னார்கள், 50 ரூபாய் அதிகம் இல்லை, ஏனெனில் சீட்டுப் போடக்கூடியவர்களுக்கு பாதுகாப்பு வேண்டும் என்று. பாதுகாப்பு வேண்டும் என்ற அடிப்படையிலே பல ஷரத்துக்களைப் போட்டிருக்கிறார்கள். ஏற்கெனவே இருக்கக்கூடிய முறையில் யாராவது சீட்டு நடத்தும்போது யார் நடத்துகிறார் என்றே சர்க்காருக்கு தெரியாமல் இருந்தது. அதனால் பொதுமக்கள் வசூல் செய்ய முடியாத நிலை இருந்ததால், மோசடிகள் நடக்க பல வாய்ப்புகள் இருந்தன. இப்போது சீட்டு நடத்தக்கூடியவர், முன்பாகவே ரிஜிஸ்டர் செய்துகொள்ளவேண்டும். நடத்தக் கூடியவர் யார், எத்தனை ரூபாய்க்கு நடத்தப் போகிறார்கள், இன்னார் மெம்பர்களாக இருக்கிறார்கள் என்ற தகவல்களையெல்லாம் ரிஜிஸ்டிராருக்குத் தெரிவித்து ரிஜிஸ்டர் செய்துகொள்ளவேண்டும். நடத்தக் கூடியவர் இன்னார், சீட்டுப் போடக்கூடியவர்கள் இன்னார், என்ன தொகை என்பதெல்லாம் ஆதார பூர்வமாக இருக்கின்றன. அப்படி இருக்கும்போது பணம் போட்டவரை ஏமாற்றக்கூடிய வாய்ப்பு இல்லை. ஏலதாரருக்குப் பணத்தைக் கொடுக்கத் தவறினால் டெபாஸிட் பணத்திலிருந்து எடுத்துக் கொடுக்க ஏற்பாடு செய்யக்கூடிய முறையில் வழிவகை இருக்கிறது. அதோடு கூட அடிக்கடி நாம் கணக்கை தணிக்கை செய்வதன் மூலம் மோசடி செய்யமுடியாது. அப்படி ஏதாவது மோசடி இருக்குமானால் உடனடியாக பணத்தைக் கட்டியவர் ரிஜிஸ்டிராருக்கு புகார் செய்துகொண்டவுடன் சீட்டையே நிறுத்திவிடக்கூடிய முறையில் ரிஜிஸ்டிரார் நடவடிக்கை எடுக்க முடியும். பணத்தைப் போடக்கூடியவர்களுக்கு அதிக நஷ்டத்தை உண்டுபண்ணக்கூடிய முறையில் சட்டத்தில் இடமில்லை. ஆகையால் 50% என்றிருப்பதை 25% என்று குறைத்தால் நலமாக இருக்கும் என்று கருதுகிறேன். ஏனென்றால் அரசாங்கத்தின் லாபத்தைக் கருதி போடப்பட்டதல்ல இந்தச் சட்டம். ஓரளவுக்கு சீட்டு போடக்கூடியவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்று கொண்டுவந்திருப்பதால் சீட்டு நடத்தக் கூடியவர்களுக்கும் வசதியாக, சட்டத்தின் மூலம் பாதிப்பு இல்லாமல், சகஜமாக நடத்த வழிவகை செய்யவேண்டுமென்பது நோக்கமே தவிர, கஷ்டத்தைக் கொடுக்கவேண்டுமென்பது நோக்கமல்ல. முதலுக்கு மோசம் இல்லாத காரணத்தினால் 25 சத விகிதம் என்று மாற்றிக்கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

அடுத்தபடியாக ஒருவர் 5,000 ரூபாய்க்கு ஏலச் சீட்டு நடத்தினுல் 2,500 ரூபாய் பாங்கில் கட்டவேண்டும். ஒரு சீட்டு ஒரு வருஷம் அல்லது 10 மாதங்கள் நடக்கும். ஒரு சீட்டு முடிந்தவுடன் மறுபடியும் இன்னெரு 5,000 ரூபாய்க்கு சீட்டு நடத்த விரும்பும்போது மறுபடியும் 2,500 ரூபாய் தொகையைக் கட்டி ரிஜிஸ்டர் செய்துகொண்டுதான் சிட்டை நடத்தவேண்டும் என்ற முறை இருக்கிறது என்றுதான் நான் கருதுகிறேன். இதன் காரணத்தால் சீட்டு முடிந்தவுடன் முடிந்துவிட்டது என்று ரிஜிஸ்டிராருக்குச் சொலல், கணக்கைப் பரிசீலனை செய்து, சீட்டுப்போட்டவர்களுக்கெல்லாம் பாக்கி இல்லாமல் பணத்தைக் கொடுத்துவிட்டார்களா என்று பார்த்து, எல்லாம் திருப்தியானவுடன், ரிஜிஸ்தரார் பர்மிஷன் பேரில் பணத்தை வாங்க வேண்டியதாக இருக்கும். அப்படிச் செய்யும்போது நீண்ட காலம் ஆகலாம். அம்மாதிரி வாங்கக்கூடிய காலத்தில் டிலே ஆகக்கூடிய முறை இல்லாமல் செய்யவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு ஏற்கெனவே 2,500 ரூபாய் கட்டியிருந்தால், மறுபடியும் 5,000 ரூபாய்க்கு சீட்டு நடத்தினுல் அந்த 2,500 ரூபாய் கட்டியிருக்கக்கூடிய தொகையை ஈடாக வைத்துக் கொள்ளலாம், மறுபடியும் கட்டவேண்டியதில்லை, அந்தத் தொகையையேகூட மாற்றிக்கொள்ளலாம் என்ற முறையில் அந்த விதியை மாற்றினுல் நலமாக இருக்கும். அப்படிச் செய்தால் சீட்டு நடத்தக்கூடியவர்களுக்கு சௌகரியமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் பல குறைபாடுகளைப்பற்றிச் சொல்லுகிறுர்கள். இன்றையதினம் சீட்டு நடத்துவதில் மூன்றுவித சீட்டுகள் இருக்கின்றன. ஒன்று, கமிஷனுக்கு சீட்டு நடத்தக்கூடியது. மற்றொன்று, 10 பேர்கள் சேர்ந்து பணத்தைப் போட்டு லாட்டரி மாதிரி விட்டு வரக்கூடிய தொகையைப் பகிர்ந்து கொள்வது. மற்றொன்று, பொது நிதிக்காக, பள்ளிக்கூடம் கட்ட—அல்லது ஆஸ்பத்திரி கட்ட—சீட்டு நடத்துவது. மூன்றுவது முறை கிராமங்களில் நிறைய இருக்கின்றன. இதற்கு பொறுப்புள்ள நபர் ஒருவர் ஜாமீனுக இருப்பார்கள். மாதம் 5,000 ரூபாய்க்கு சீட்டு நடத்துவார்கள். அந்த 5,000 லாபத்தை எடுத்துப் பொதுக் காரியங்களை நடத்துவார்கள். சொந்தத்திற்கு எடுத்துக்கொள்வது கிடையாது. காரியத்தை நடத்திய பிறகு இருக்கக்கூடிய லாபப் பணத்தை சீட்டுப் போட்டவர்களுக்குப் பிரித்துக் கொடுத்து விடுவார்கள். ஒன்று தன்னுடைய லாபத்திற்காக நடத்தப் படுவது, மற்றொன்று தங்கள் சௌகரியத்திற்காக சீட்டு போட்டு பங்குதாரர்கள் பிரித்துக்கொள்வது, மற்றொன்று பொது நிதிக்காக, பொதுக் காரியத்திற்காக பணி செய்யக் கூடியவர்கள் செய்வது. லாபத்திற்காக நடத்தக்கூடிய சீட்டுத் தான் இந்தச் சட்டத்தின்கீழ் வரும், மற்ற இரண்டும் இந்தச் சட்டத்தின்கீழ் வராது என்று சொன்னுர்கள்.

இந்தமாதிரி ஒரு சட்டம் அல்லது விதி கொண்டு வரப்படு கின்ற நிலைமையிலே, அதை ஓரளவு தெளிவாக குறிப்பிட்டு

31st January 1961] [Sri M. R. Kandaswami Mudaliyar]

விட்டால் நலமாக இருக்கும். அதாவது இந்தமாதிரி தன்னுடைய லாபத்திற்கு என இல்லாமல், பொதுக்காரியங்களுக்கு சீட்டுப் பிடித்துக் கொள்வார்களேயானால், இந்தமாதிரி பணம் கட்டக்கூடிய விதிமுறை வேண்டியது இல்லை. அவர்களுக்கும் இந்த விதியிலிருந்து, சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்று இந்த மசோதாவில் சேர்த்துக் கொண்டால், அது கிராமத்திலேயுள்ளவர்களுக்கு பெரிய உபகாரமாக இருக்கும். இல்லாவிட்டால் பல அதிகாரிகளிடம் கஷ்டப்படக்கூடிய நிலைமை தான் ஏற்படும். ஆகவே இந்தத் திருத்தத்தைச் சேர்த்துக் கொண்டால் நலமாக இருக்குமென்று கேட்டுக்கொள்கிறேன். மற்றபடி நம்முடைய நண்பர்கள் பல பேர்கள் சொல்லக்கூடிய விஷயங்களையெல்லாம் சொல்லி, மனப்பூர்வமாக இந்த மசோதாவை ஆதரித்துப் பேசினார்கள். இந்த மசோதா மிகவும் அவசியமாகவும், அவசரமாகவும் கொண்டுவர வேண்டியது. சீட்டுப் பிடித்துள்ளவர்களை பாதுகாக்க வேண்டிய அளவுக்கு முக்கியமான விஷயமாகும். பல ஆயிரக்கணக்கான ரூபாய்களைப் பெண்களும், மற்றும் ஏழைகளும் போட்டுவிட்டு ஏமாந்துவிடக் கூடாது என்ற முறையில், அப்படிப்பட்டவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கக்கூடிய முறையில் விதிகளை மாற்றியமைக்க வேண்டும். ஐம்பது என்று இருப்பதை 25 என்று மாற்ற வேண்டுமென்றும், கிராமத்திலே தனக்கென்று இல்லாமல், பொதுநலனிற்காக செய்யக்கூடிய காரியங்களுக்கு இந்தச் சட்டத்திலிருந்து விதிவிலக்கு தரவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI V. S. MANIKKASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, வெகுநாட்களாக நமது ராஜ்யத்திலே எதிர்பார்க்கக் கூடிய சீட்டு பண்ட் மசோதா இப்போது வந்துள்ளதை மனப்பூர்வமாக வரவேற்று என்னுடைய கருத்துக்களைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நமது நாட்டிலே இந்த சீட்டு பண்டு என்று ஆரம்பித்து, இதைக் கொண்டு பல ஏழை மக்களை, பாமர மக்களை பல பேர்கள் பலவாறு ஏமாற்றி வந்திருப்பது அனைவருக்கும் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். கோர்ட்டிலே அனுபவமுள்ள சில பேர்களுக்கு இது எவ்வளவு தூரம் ஜனங்களை ஏமாற்றியிருக்கிறது, கஷ்டத்தைக் கொடுத்திருக்கிறது என்பது தெரிந்திருக்கும். சாதாரணமாக இதிலே சப்ஸ்கிரைபர்களுக்கு வேண்டிய பாதுகாப்பு அளிக்கும் முறையிலே வகுக்கப்பட்டிருக்கும் பல திட்டங்களையும் மனப்பூர்வமாக நான் வரவேற்கிறேன். அவ்விதம் சொல்வதற்குக் காரணம், (1) கண்டிப்பாக ரொக்கம் கொடுக்க வேண்டுமென்பதும், (2) சீட்டு பண்டை எவ்விதத்திலும் ரிஜிஸ்தர் செய்து கொள்ள ஏற்பாடு செய்திருப்பதும், (3) இதற்கென்று ஒரு இலாகா ஏற்படுத்தி, அவைகளை பரிசீலனை செய்ய ஏற்பாடுகள் செய்திருப்பதும் மிகவும் வரவேற்கத் தக்க அம்சங்களாகும்.

இதிலே நான் கவனித்த வரையிலே, சுலபமாக போர்மேனாக இருக்கக்கூடியவர்கள் பாமர மக்களை ஏமாற்றக்கூடிய ஒரு பகுதி

இருப்பதாகத் தெரிகிறது. கிளாஸ் 35-லே, "Foreman to allow subscribers to inspect Chit records" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த வகையிலே போர்மேன் என்பவன், சப்ஸ்கிரைபர்களுக்கு சந்தர்ப்பம் அளிக்காவிட்டால், ஏமாற்றுவதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படும். ஆகவே அந்த முறையிலே இல்லாமல், இந்த விதியை திருத்தி அமைக்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து "Debtor's Protection Act" படி கிரெடிட்டாரிடமிருந்து டெட்டாருக்கு அக்கவுண்டஸ் போகும்போது, அக்கவுண்ட்ஸ் நகல் கொடுக்க வேண்டுமென்றும், அவர்கள் இன்ஸ்பெக்ஷன் செய்ய அனுமதிக்க வேண்டுமென்றும் இருந்தாலுங்கூட, சாதாரணமாக நடைமுறையிலே இது நடைபெறுவதில்லை. அந்த முறையிலே இந்தச் சட்டம் அமைந்திருக்கிறதினாலே, கிரெடிட்டார்கள் அவ்வாறு நடக்க இடம் ஏற்படுகிறது. ஆகவே, இதைத் தவிர்க்க வழிவகை செய்ய வேண்டியது மிகவும் அவசியமென்று நான் கருதுகிறேன்.

அடுத்து க்ளாஸ் 36-ஐப் பார்த்தால், அந்தச் சட்டத்திலே ரிகார்டுகளையெல்லாம் "After the termination of chit, they should be preserved for 12 years from the termination of the Chit என்றிருக்கிறது. இப்படி நீண்ட காலத்திற்கு இருக்க வேண்டுமென்றிருப்பது அவசியம்தானு என்று தயவுசெய்து கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கடுத்து "Inspection of Chit Books and Records" என்றிருப்பதிலே, கிரிமினல் புரொசீஜர் கோடில் அமைந்திருக்கக் கூடிய நல்ல விஷயங்களை இந்தப் பகுதியிலே சேர்க்க வேண்டியது அவசியமாக இருக்கிறதினாலே, நான் ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். சாதாரணமாக, இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு முன்னால் மாஜிஸ்ட்ரேட் அனுமதி வாங்கிக் கொண்டுதான் இன்ஸ்பெக்ஷன் செய்ய வேண்டுமென்றிருக்கிறது. இது அவசியம்தானு என்பதையும், அதற்குப் பதில் கிரிமினல் புரொசீஜர் கோட், செக்ஷன் 191, 192, 193-ல் இருக்கக்கூடிய விஷயத்தை இதில் சேர்த்துவிட்டால், நல்ல முறையில் அமையுமென்பதையும் யோசித்துப் பார்க்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, கிளாஸ் 38-லே "Winding up of Chits" என்றிருக்கிறது. இந்த சட்டம் நகரத்தைப் பொறுத்தவரையில் சிடி சிவில் கோர்ட்டு பார்த்துக்கொள்ளும் என்றிருந்தாலும், மற்றப் பகுதிகளிலே ஜில்லாக்களைப் பொறுத்தவரையில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டுக்குப் போய் தேங்கி நிற்க வேண்டிய நிலை ஏற்படுகிறது என்பதை மிகவும் பணிவோடு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதற்குமேல் அப்பீலுக்குப் போக வேண்டுமென்றாலும், டிஸ்டிரிக்ட் கோர்ட் தீர்ப்பை வாங்கி, ஹைகோர்ட்டுக்குப் போக வேண்டியிருக்கிறது. ஆகவே, அந்தந்தப் பகுதிகளிலே இருக்கக்கூடிய Courts of ordinary original

31st January 1961] [Sri V. S. Manikkasundaram]

**Civil jurisdiction** என்ற முறையில் இதை மாற்றியமைத்தால் நல்ல முறையிலே அமையும். இதையும் அரசாங்கம் யோசனை செய்ய வேண்டியது அவசியம் என்பதை மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். இதனால் ஒரு கெடுதலும் வராது என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**"Hindu Religious and Charitable Endowments Act"** —— -ஐப் பார்த்தால், சில காரியங்களுக்கு டிஸ்டிரிக்ட் கோர்ட்டுக்குப் போய், மனுவை கொடுத்து, அதற்கு மேலும் ஹைகோர்ட்டுக்கு வருவதில் உள்ள கஷ்டத்தை உணர்ந்து, அதேமாதிரி இதிலும் ஓரளவு கஷ்டம் இருக்க வேண்டுமென்பதை தயவுசெய்து கவனத்தில் வைத்துக்கொண்டு, அதற்கு வேண்டிய திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று மிகவும் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். இந்த **"Winding up Proceedings"** எடுப்பதற்கு முன்னரே அரசாங்கத்தினுடைய அங்கீகாரம் பெறவேண்டுமென்றும், அது அந்த அரசாங்கத்தினுடைய **(b) and (h)** கிளாசுக்கு மட்டும்தான் பொருந்தும் என்றும் 39-வது ஷரத்திலே கிளாஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், 38-வது ஷரத்திலே **(d)** கிளாஸாக.

"If it is proved to the satisfaction of the Court that the foreman is **unable to pay the amounts due to subscribers"** என்றிருப்பதால், ஹைகோர்ட்டிலே வந்து, அந்த விண்ணப்பத்தின்பேரில் போர்மென் பணம் திருப்பி கொடுப்பதற்கு சக்தியற்ற நிலைமையில் உள்ளார் என்று தீர்ப்பு பிறகு ஏற்படக்கூடிய நிலைமையிலே, அரசாங்கத்தினுடைய முன் அனுமதி தேவை என்பது எந்த வகையிலே பொருந்தும் என்பதை யோசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

சாதாரணமாக, அரசாங்கத்தின் அனுமதி பெறுவதற்கு ஒரு காரணம் சொல்வது வழக்கம். அதாவது பல சப்ஸ்கிரைபர்களிடமிருந்து பல விண்ணப்பங்கள் ஒரேமாதிரி வராமல் இருப்பதற்கு, ஒரே தாவா பூர்த்தி செய்து, எண்ணற்ற ஒரே மாதிரி தாவாக்களை தடுக்க ஏற்பாடு செய்வது வழக்கம். அந்தமாதிரி இருக்குமானால் கோர்ட்டிலேயே மற்ற ஒவ்வொரு பிரதிநிதியும் கட்சி சேர்க்கப்பட்டு, பின்பு பல தாவாக்களுக்கு ஒரே மாதிரி தீர்ப்புக் கொடுக்க அங்கு இடம் இருக்கிறது. ஆனால் இதற்கு அது பொருந்துமா என்று யோசிக்க வேண்டும். சில சமயங்களில், இந்தமாதிரி பணம் திருப்பிக் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கும்போது அரசாங்கத்திற்கு விண்ணப்பம் செய்து, அங்கீகாரம் பெற்று, அதன்பிறகு தாவாக்கள் செய்ய வேண்டுமென்றால், அதனால் காலதாமதம் ஏற்படுமென்பதையும், அதனால் பல பேர்கள் பாதிக்கப்படுவார்கள் என்பதையும் தயவுசெய்து மனதில் வைத்துக்கொண்டு இதைத் திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோல், **"If it is just and equitable that the chit should** be wound up ——— என்பதிலே, நியாயமா இருக்குமா என்பதைப்பற்றி ஒரு முடிவுக்கு வரவேண்டும். நியாயம் எந்த

முறையிலே, ஆதாரத்திலே ஏற்படுத்தப்படுகிறது என்று ஒரு முடிவுக்கு வர யோசனை செய்ய வேண்டுமென்று ேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி விவாரங்ககளுக்கு மட்டும், அதாவது கிளாஸ் 38, உப பிரிவு 'டி' அண்டு 'எச்' சம்பந்தப்பட்டவரை, இந்த இரண்டு விஷயங்களுக்கு மட்டும் அரசாங்கத்தின் அங்கிகாரம் தேவையா என்பதை மிகவும் தீவிரமாக யோசனை செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். மற்ற அம்சங்களைப் பொறுத்தவரையில் நான் இந்த மசோதாவை முழு மனதோடு வரவேற்கிறேன்.

கிளாஸ் 57-ஐ பொறுத்தவரையில், சாதாரணமாக கோர்ட்டிலே பழக்கத்தில் இல்லாத ஒரு பதத்தை இங்கே பிரயோகித்திருக்கிறார்கள். 'ஸாலரீடு மாஜிஸ்டிரேட் ஆப் தி செகண்டு கிளாஸ்' என்று கோர்ட்டிலே பழக்கத்தில் இல்லாத ஒரு பதத்தை உபயோகித்திருக்கிறார்கள். 'மாஜிஸ்டிரேட் ஆப் தி செகண்டு கிளாஸ்' என்றிருந்தால் என்ன கெடுதல் ஏற்பட்டுவிடும் என்று எனக்குப் புரியவில்லை. 'ஸம்மரி ப்ரொசிஜர்' 'வாரண்டு ப்ரொசிஜர்' என்ற பாகுபாடு இருப்பது நமக்குத் தெரியுமே தவிர, 'ஸாலரீடு மாஜிஸ்டிரேட்' 'ஹானரரி மாஜிஸ்டிரேட்' என்ற வேறுபாட்டை ஏற்படுத்தியிருப்பதை நாம் இது வரையிலே கவனித்திருக்க முடியாது என்று நினைக்கிறேன். இந்த விஷயத்தை தயவுசெய்து மனதிலே வைத்துக்கொண்டு, இதிலே வேண்டிய திருத்தங்களை ஏற்படுத்தி அதி விரைவிலே இதை அமுல் நடத்துவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின்மீது விவாதத்தில் கலந்து கொண்ட கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன். பொதுவாக செலக்ட் கமிட்டி செய்த மாறுதல்கள் எல்லாவற்றையும் வரவேற்றிருக்கிறார்கள். செலக்ட் கமிட்டியில் எந்த அளவுக்கு நாம் இந்தத் தொழிலுக்கு வேண்டிய பாதுகாப்புகள், வசதிகள் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் ஒவ்வொரு ஷரத்தையும் அலசிப் பார்த்தோம். அதோடு இதில் பணம் போடுகிற சாதாரண சப்ஸ்கிரைபர்கள் நஷ்டம் அடைந்துவிடாமல், ஏமாந்து விடாமல் இருக்கவேண்டும் என்பதற்காக உரிய பாதுகாப்புகளை நாம் அளித்திருக்கிறோம். அந்த முறையிலேதான் இந்த விவாதத்தில் பங்கு எடுத்துக் கொண்ட அனைவரும் இந்த மசோதா தேவை என்பதையும், இதிலே இருக்கிற ஷரத்துகள் பொதுவாக இரு சாராருக்கும் பாதகம் விளைவிக்காத முறையில் இருக்கிறது என்பதையும் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அதற்காக எனது நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

குறிப்பாக, சில விஷயங்கள் இங்கு குறிப்பிடப்பட்டன. உதாரணமாக ஸ்ரீ லாசர் அவர்கள் ஆக்ஷன் சிட் கமிஷன், டிஸ்கவுண்டு இல்லாமல் நடத்தினால் அதற்கு விதி விலக்கு

கொடுக்கவேண்டும் என்று சொன்னார்கள். நாம் இப்பொழுது விதிவிலக்கு எதற்கு கொடுத்திருக்கிறோம் என்று சொன்னால், மொத்தத் தொகையை அதிலே ஈடுபட்டிருக்கிறவர்கள் தாங்களே பிரித்துக் கொள்ளுகிற சிட்டுகளுக்கு மாத்திரம் தான். கிராமங்களில் லாபத்திற்கு இல்லாமல் ஏதோ ஒரு சிலர் சேர்ந்து, உதாரணமாக சிட்டுத் தொகை ரூ. 100 அல்லது ரூ. 500 ஆக இருந்தால், முறையாக ஒவ்வொருவருக்கும் அந்த ரூ. 100 அல்லது ரூ. 500 கிடைக்கும்படியாக அவர்கள் சிட்டு எடுத்து அதை பிரித்துக்கொள்ளுகிறார்கள். இதில் போர்மென் ஒருவரும் கிடையாது அல்லது போர்மென் கமிஷன் வாங்குவதும் கிடையாது, எந்த விதமான லாபமும் அடைவதில்லை. அதில் ஈடுபடுகிறவர்களுக்கு பணம் குறையாமல் முழுப் பணமும் கொடுக்கிறோம் என்று சொன்னால், அதாவது அந்த ரூ. 100 அல்லது ரூ. 500-ம் கிடைக்கிறது என்று சொன்னால் அந்த முறையில் இருக்கும் சிட்டுகளுக்கு சட்ட திட்டங்கள் வேண்டியதில்லை என்ற முறையில் நாம் விதி விலக்கு அளித்திருக்கிறோம். வியாபாரிகளுக்கு இம்மாதிரி அன்றாட தேவை ஏற்படுகிற காரணத்தினால் அவர்கள் சிலர் சேர்ந்து இந்த விதமாக ஸப்ஸ்கிரைப் செய்து மொத்தத் தொகையையும் அவரவர்கள் தங்கள் பகுதி வருகிற பொழுது அவர்கள் எடுத்துக்கொள்ளுகிறார்கள். அதில் போர்மென் ஒன்றும் கிடையாது. கமிஷன் எடுப்பதும் கிடையாது. ஆகையால் அவர்களுக்கு இந்த சட்டத்தில் பூரண விதிவிலக்கு அளித்திருக்கிறோம். ஆனால் ஸப்ஸ்கிருப்ஷன் எல்லோரும் போட்டு சிட்டு ஏலம் எடுக்கிறபொழுது, தள்ளி எடுத்து, தள்ளி எடுத்த பணத்தை மீண்டும் அங்கத்தினர்கள் தங்களுடைய சந்தா தொகையில் குறைத்துக்கொண்டு கட்டுகிறார்கள் என்ற நிலைமையை பார்த்திருக்கிறோம். சாதாரணமாக சிட்டில் உள்ள எல்லா அம்சங்களும் இதில் தோன்றுகின்றன. இதில் எவ்வளவு ரூபாய் தள்ளி எடுக்கப்படுகிறது, தலைக்கு எவ்வளவு விகிதாசாரம் வந்தது, நியாயமாக அது பங்கிடு செய்யப்பட்டதா என்கிற பிரச்னைகளெல்லாம் எழும்பும். அவ்வாறு பிரச்னைகள் வருகிறபொழுது, கணக்கு வழக்கு இல்லாமல், சட்ட திட்டங்கள் இல்லாமல் இந்த சட்டத்தில் விதிவிலக்கு கொடுத்துவிட்டால், அதில் பங்கு எடுத்துக் கொள்ளுகிற அங்கத்தினர்களுக்கு எந்தவிதமான பாதுகாப்பும் இல்லாமல் போய்விடும். அதன் காரணமாகத்தான் எந்தச் சிட்டாக இருந்தாலும் அவர்கள் எடுக்கிறபொழுது அவர்களுக்கு கிடைக்கிற பணம் அவர்கள் கொடுக்கிற தொகைக்கு குறைவாக இருக்கிறதோ அந்த சிட்டுகள் எல்லாவற்றிற்கும் சட்ட திட்டங்கள் இயற்றவேண்டும். பத்து பேர்கள் சேர்ந்து ரூ. 1,000-க்கு சிட்டுப் போடுகிறார்கள் என்று வைத்துக்கொள்ளலாம். அதில் சிட்டு ஏலம் விடப்படும்பொழுது ரூ. 250, அல்லது ரூ. 350 தள்ளி எடுத்தார்கள் என்றால், எப்பொழுதும் எல்லோரும் சீட்டு போடுகிற இடத்திற்கு போவதில்லை. இதில் சந்தேகங்கள் வந்துவிடும். வராதவர்களுக்கு எவ்வளவு தள்ளி எடுத்தார்கள் என்று தெரிந்துகொள்ளுவதற்கு வழி இருக்காது. இப்பொழுது நாம் வைத்திருக்கிற சட்டப்படி

[Sri R. Venkataraman] [31st January 1961

ஏலம் எடுத்தால், யார் யார் ஏலம் கோரினார்கள், எவ்வளவு கோரப்பட்டது என்பதற்கெல்லாம் மினிட்ஸ் வைத்திருக்க வேண்டும். யார் இருந்தாலும், யார் இல்லாவிட்டாலும் சரி, எந்த இடத்திலிருந்தும் சிட்டுப் பணத்தை அனுப்பலாம். அம்மாதிரி செய்வதால் எல்லாம் நியாயமான முறையில் நடத்தப்படுகிறதா, தங்கள் பணத்திற்கு அதில் எந்தவிதமான நஷ்டமும் ஏற்படாமல் நடத்தப்படுகிறதா என்பதையெல்லாம் கண்டு கொள்ள முடியும். அம்மாதிரி சிட்டுகளுக்கு விதிவிலக்கு அளித்துவிட்டால், எவ்வளவு தள்ளி எடுக்கப்பட்டது போன்ற விஷயங்கள் தெரியாது. அதில் தவறுகள் தப்புகள் ஏற்படுவதற்கு சந்தர்ப்பங்கள் கிடைத்துவிடும். இந்த சட்டதிட்டங்கள், கட்டுப்பாடுகள் இருந்தால் இதிலே தவறுகள் நடக்காமல் இருக்கும். அதற்கான சந்தர்ப்பங்கள் அளிக்கப்படாமல் இருப்பதற்கு நாம் முயற்சி செய்யவேண்டும். அதன் காரணமாகத்தான் முழுத் தொகையும் பெறுத எந்த சிட்டாக இருந்தாலும், அதற்கு இந்தச் சட்டம் அமுலாக்கப்படவேண்டும் என்று கொண்டு வந்திருக்கிறோம். செலக்ட் கமிட்டியும் இதை நன்றாக பரிசீலனை செய்து இதுதான் நியாயம் என்று ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

அடுத்தபடியாக சிலர் குலுக்குச் சீட்டு போட்டு பிரைஸ் எடுத்துக்கொண்டு போய்விடுகிறார்கள். அதற்குப் பிறகு அவர்கள் கட்டணம் கட்டுவதே இல்லை. அதுபற்றி ஸ்ரீ செல்வராஜ் அவர்கள் பேசினார்கள். அந்தவிதமான சீட்டுகள் உண்மையாகவே லாட்டரி தான். அதற்கு சட்டப்பாதுகாப்பு நாங்கள் கொடுப்பதாக எண்ணம் இல்லை. அந்த விதத்தில் சிட்டு நடத்தினால் அது லாட்டரி சட்டத்திற்குள் வந்துவிடும். சர்க்காருடைய அனுமதி பெறுமல் நடத்தினால் அதற்கு தண்டனையும் கிடைக்கும். அம்மாதிரி எத்தனையோ பேர்கள் நடத்திக் கொண்டிருக்கலாம். அது சட்டத்திற்கு புறம்பானது. ஆகவே, அதற்கு பாதுகாப்பு அளிக்க சர்க்காருக்கு உத்தேசம் இல்லை. அந்த விதத்தில் சிட்டுக்கள் நடத்தக்கூடாது என்பதுதான் சர்க்காருடைய நோக்கம் ஆகும்.

அடுத்தபடியாக சிட்டுக்கு பணம் கொடுக்கிறார்கள். அவர்களுக்கு பாதுகாப்பு என்ன? சீட்டு எடுத்தவுடன் மீதி பணத்திற்கு பிராமிஸரி நோட்டு எழுதிக்கொடுக்க வேண்டியிருக்கிறது. முழுத் தொகைக்கும் அவர்கள் பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுக்கிறார்கள். ஏதாவது ஒரு சமயத்தில் பணம் கொடுக்காமல் போனாலும் சரி, போர்மேனுக்கும் அங்கத்தினருக்கும் வேறு ஏதாவது தகராறு வந்துவிட்டாலும் சரி, உடனே கோர்ட்டில் தாவா போட்டு முழுப் பணத்தையும் வசூல் செய்ய முன்வந்துவிடுகிறார்கள். என்னுடைய சொந்த அனுபவத்தில் சொல்லுகிறேன். நான் பல வருஷங்களுக்கு முன்பு ஸ்மால் காஸ் கோர்ட்டில் பிராக்டிஸ் செய்யும்பொழுது பல முறை நான் பார்த்திருக்கிறேன். இம்மாதிரி, ஏதாவது சண்டை சச்சரவு வந்துவிட்டால் சீட்டுக்குக் கொடுக்கவேண்டிய முழுப் பணத்தையும் உடனடியாக தாவா போட்டு வசூல் செய்ய டிகிரி வாங்கிவிடுவது வழக்கம்.

31st January 1961] [Sri R. Venkataraman]

அந்த முறையை எப்படியாவது தடுக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு தான் 25-வது கிளாஸில் அது சிட்பண்டு சம்பந்தமாக எழுதிக்கொடுத்த நோட்டாக இருந்தால், இன்ஸ்டால்மெண்டு டிகிரிதான் கொடுக்கவேண்டுமென்று கண்டிருக்கிறோம். ஸ்ரீ லாஸர் அவர்கள் சிட்பண்டு சம்பந்தமாக எழுதப்பட்டதா அந்த பிராமிசரி நோட்டு என்பதை எப்படி கண்டுபிடிப்பது என்று கேட்டார்கள். அதற்காகத்தான் இந்தச் சட்டத்தை இயற்றியிருக்கிறோம். ஒரு அங்கத்தினர் ஒரு குறிப்பிட்ட தேதியில் சிட்டு எடுப்பதாக இருந்தால், அந்தத் தேதியில் இந்த ஆக்ட் பிரகாரம் ஒரு மினிட்ஸ் இருக்கும். அம்மாதிரி மினிட்ஸ் எழுதவேண்டும். 72-வது நெம்பர் சிட்டு, எத்தனை பேர்கள் வந்திருந்தார்கள், எந்த விதத்தில் ஆக்ஷன் கோரப்பட்டது, இன்னாருக்கு கொடுக்கப்பட்டது, இவ்வளவு தள்ளி எடுக்கப்பட்டது என்பதற்கெல்லாம் மினிட்ஸ் வைத்துக்கொள்ளவேண்டும். இதில் ஷரத்து போட்டிருக்கிறோம். ஒவ்வொரு சீட்டு ஏலம் விடும்போதும், ஒரு "மினிட்ஸ்" 11-30 a.m
வைத்திருக்க வேண்டும் என்று, அதில். ஏலம் எவ்வாறு விடப்பட்டது, யார் யார் எவ்வளவு எவ்வளவுக்குக் கேட்டார்கள், யாருக்கு எவ்வளவுக்கு கொடுக்கப்பட்டது என்ற விவரங்கள் இருக்க வேண்டும். இப்பொழுது, சிட்டு போர்மேன் சீட்டுத் தொகைக்காக ஒரு பிராமிசரி நோட்டு வாங்குவார். இதைச் சுலபமாக ருஜுவாக்கிவிடலாம். சீட்டு எடுத்த தேதி, பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுத்த தேதி, இவைகளைக் கொண்டு ருஜுவாகி விடும். ஆகவே, எந்தவிதமான ஏமாற்றுதலும் செய்ய முடியாத நிலையில் இது அமைந்திருக்கிறது. சப்ஸ்க்ரைபர்கள் நஷ்டமடையாமலும், கஷ்டத்திற்கு ஆளாகாமலும், போர்மென் தாவா போட்டு முழுப்பணத்தையும் வசூலிக்காமலும் இருக்க நல்ல பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக, இந்த சீட்டுகள் "வைண்டிங் அப்" பற்றியது. அதாவது ஒரு சீட்டை மூடவேண்டும் என்று பெடிஷன் கொடுப்பதாக இருந்தால், அதை ஏன் சாதாரணக் கோர்ட்டுகளுக்கு கொடுக்கவில்லையென்று கனம் லாசர் அவர்களும், கனம் மாணிக்க சுந்தரமும் கேட்டார்கள். ஒரு சீட்டு என்றால், யாராவது திடீர் திடீரென்று, ஏதோ கோப தாபத்தால், பக்கத்துக் கோர்ட்டில் ஒரு பெடிஷன் போட்டால், அது பின்னால் அனுமதித்தாலும், அனுமதிக்காவிட்டாலும், சீட்டின் கௌரவம் அதற்குள்ள நல்ல பெயர் கொஞ்சம் போய்விடும். அதைத் தடுக்க வேண்டும். கம்பெனிச் சட்டத்தில் கொடுத்திருப்பதைத்தான், அதே ஷரத்தை நாம் இங்கே கொடுத்திருக்கிறோம், டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டுக்கு வைண்டிங் அப் பெடிஷன் போடவேண்டுமென்பதை. அதேபோலத்தான், சிட் பண்ட் வைண்டிங் அப், சீட்டை மூடவேண்டும் என்பதற்காக யாராவது பெடிஷன் போடுவதானால், அதை ஜில்லா கோர்ட்டில்தான் போடவேண்டும் என்றால்தான், ஓரளவுக்கு பெடிஷன் போடுகிறவர்களுக்குத் தயக்கம் இருக்கும். திடீர் திடீரென்று யாரும் பெடிஷனைப் போடமாட்டார்கள்; போர்மென் அவர்களுக்கும் ஒரு பெரிய தொல்லை. தொந்தரவு இல்லாமல்

[31st January 1961 [Sri R. Venkataraman]

செய்ய வேண்டும் என்பதற்காகவும் இதைக் கொடுத்திருக்கிறோம். டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் அவர்களுக்கு அந்த அதிகாரம் கொடுக்கும் போது, அதற்கு மேல் அப்பீல் என்று வரும்போது, கிளாஸ் 49-ல் அப்பீல் ஹைகோர்ட்டுக்கு என்று கொடுத்திருக்கிறோம். ஏன் ஹைகோர்ட்டுக்கு கொடுக்க வேண்டும் என்று கனம் லாசர் கேட்டார்கள். காரணம் கீழே அதிகாரம் ஜில்லா கோர்ட்டுக்குக் கொடுத்திருப்பதால், அப்பீல் ஹைகோர்ட்டுக்குப் போகவேண்டி யிருக்கிறது. கம்பெனி சட்டத்தின்கீழே உள்ளதையே, சிட் பண்ட்ஸ் வைண்டிங் அப் பெடிஷன்களையும் தொந்தரவு கொடுக்கும் முறையில் போகாமல் தவிர்க்க, முதலில் ஜில்லா கோர்ட்டுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ டேனியல் ஒரு பெரிய, முக்கியமான சட்டப் பிரச்சினையை எழுப்பினார்கள் : அவர்கள் இந்த சிட்டுக்காகக் கொடுக்கும் ஜாமீன் தொகையை மீண்டும், மறுமுறை வேறு எந்த ஜாமீனு கவும் பராதீனம் செய்யக்கூடாது என்று போட்டிருக்கிறது, அது ட்ரான்ஸ்பர் ஆப் ப்ராபர்டீஸ் ஆக்டுக்கு உகந்ததல்ல, முரண் பட்டது. கான்ஸ்டிட்யூஷன் பிரகாரம் ஒரு விஷயத்தில் மத்திய சட்டம் இருக்குமானல், அதற்கு முரணாக ராஜ்ய சட்டம் அமைந்தால், மத்திய சட்டம்தான் அமலாகும், ராஜ்ய சட்டம் அந்த அளவுக்கு செல்லாது என்று எடுத்துக் காட்டி னார்கள். இந்தச் சட்டத்தின் அமைப்பு எப்படியென்றால், ஆரம்ப காலத்தில் ஒவ்வொரு சிட்டுக்கும் டெபாஸிட் கொடுக்க வேண்டும் என்று போட்டிருந்தோம். அது கொஞ்சம் கஷ்டமாக இருக்கும் என்ற காரணத்தால், செலக்ட் கமிட்டி அதைத் திருத்தி யமைத்தது. செலக்ட் கமிட்டி திருத்தும்போது, ஒரு சிட்டுக்குக் கொடுத்த அதே பணத்தை தொடர்ந்து நடத்தும் சிட்டுகளுக்கு ஜாமீனுகக் கொடுக்க அனுமதி கொடுக்க வேண்டும். அதே டெபாஸிட்டை, அதே ஸெக்யூரிடியை மீண்டும் ஜாமீனுக வைத்துக் கொள்ள வசதியளிக்க வேண்டும் என்று கோரியதை, நல்ல கருத்து என்றுதான் அதை ஏற்றுக் கொண்டு, அதையே ஷரத் திலும் இருக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறோம். அதே தொகையை இரண்டாவது, மூன்றாவது சிட்டுகளுக்கு ஜாமீனுகக் கொடுக் கலாம் என்று சொல்லும்போது, அந்த சொத்தைப் பராதீனம் செய்யக்கூடாது என்று சொல்லவேண்டியது நம் பொறுப்பாகிறது. ஜாமீனுகக் கொடுத்த சொத்தின்பேரில் எந்த வில்லங்கமும் மார்ட்கேஜ் சார்ஜும், மற்றவைகளும் செய்வதாக இருந்தால், ஸெக்யூரிடி போதாமல் போய்விடும். அதற்காகத்தான் இந்த ஷரத்து போட்டிருக்கிறது. மேலும், இந்தச் சட்டம் பிரஸிடெண் டுக்கு அஸ்ஸெண்டுக்குப் போகும். இது கன்கரண்ட் லிஸ்டில் இருக்கிறது. கன்கரண்ட் சப்ஜக்ட் சம்பந்தமான சட்ட மாகையால், இது பிரஸிடெண்டுக்குப் போகும். பிரஸிடெண்டின் உத்தரவு வந்தால், இந்தச் சட்டம் செல்லுபடியாகும். பிரஸிடெண்ட் அனுமதி வந்தவுடன், ட்ரான்ஸ்பர் ஆப் ப்ராபர்டீஸ் ஆக்டுக்கு, மத்திய சட்டத்திற்கு முரணாக இருக்குமானல்,

பிரஸிடெண்ட் அஸ்ஸெண்ட் இருக்கும் காரணத்தால், ராஜ்ய சட்டம்தான் அமலாகும். ஆகவே, இதில், சட்டப் பிரச்சினை ஒன்றும் எழுவில்லை. எந்த விதமான தவறும் ஏற்பட்டுவிடாது என்று தெரிவிக்கிறேன். இந்தச் சட்டத்தை பிரஸிடெண்டின் சம்மதத்திற்கு அனுப்பவேண்டுமென்பது தான் சர்க்கார் யோசனை.

இந்தச் சட்டத்திலே மிக முக்கியமான பிரச்சினை எவ்வளவு ஜாமீன் தொகை என்பது. ஆரம்பத்தில், சீட்டின் முழுத் தொகையும் ரொக்க ஜாமீனாகவோ, சொத்து ஜாமீனாகவோ வாங்குவது என்று போட்டோம். அது பின்னால் மாற்றப்பட்டது. திருவாங்கூர்-கொச்சி சட்டத்திலே அதே விதமாக இருக்கிறது என்று கனம் ராமசாமி வற்புறுத்தினார்கள். திருவாங்கூர் ராஜ்யத்தில் முழுத் தொகையையும் டெபாசிட்டாகக் கொடுப்பது அல்லது சொத்து ஜாமீன் இரட்டிப்பாகக் கொடுப்பது என்று, திருவாங்கூரில் செய்யும்போது சென்னை ராஜ்யத்தில் அப்படிச் செய்யத் தகுதியில்லையா என்றார்கள். பழைய முறையில் இரட்டிப்பு மடங்கு சொத்து ஜாமீன் வாங்குவதும், முழுத்தொகையை ரொக்க ஜாமீனாக வாங்குவதும் திருப்தியில்லை என்று தெரிவித்தார்கள். அது ஒரு அபிப்பிராயம். அந்த அபிப்பிராயம் பலருக்கு இருக்கிறது என்பதை மறுக்க முடியாது. மற்றவர்களுடைய பணத்தை வாங்கி தாங்கள் ஒரு பிஸினஸை நடத்துவது என்று சொல்லும்போது, பாதுகாப்பு கொடுக்கவில்லையென்றால், அவர்கள் பணத்தை எப்படி வேண்டுமானாலும் உபயோகிக்கலாம் என்றாகிவிடுகிறது. ஆகவேதான் கட்டுப்பாடு வருகிறது. தன்னுடைய சொந்தப் பணத்தை, சொத்தைப் போட்டு ஒரு பிசினஸ் பண்ணுவதென்றால், கட்டுப்பாடு ஒன்றும் அவசியமில்லை. சப்ஸ்க்ரைபர்களிடமிருந்து பணத்தை வாங்கி, அதில் முதல் சீட்டையும் தானே எடுத்துக்கொண்டு, அந்தப் பணத்தைக் கையாள்கிறார்கள் என்றால், அதற்கு சர்க்கார் கட்டுப்பாடு வேண்டும், சமூகம் கட்டுப்பாடு பண்ண வேண்டும், இல்லையென்றால் அது சரியில்லை. ஏனென்றால், இது சொந்தப் பணம் இல்லை; சப்ஸ்க்ரைபர்கள் பணம். அவர்கள் பணத்துக்கு நியாயமான பாதுகாப்பு அளிக்க வேண்டும். ஆகவேதான் ஜாமீன் தொகை வேண்டும் என்று நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். எந்த அளவுக்கு ஜாமீன் தொகை இருக்கவேண்டுமென்பதில் பல அபிப்பிராயங்கள் கூறப்பட்டன. முக்கியமாக கனம் கந்தசாமி முதலியார் சொன்னார்கள், 25 சதவிகிதம் போதாதா என்று. இருபத்தைந்து சதவிகிதம் மட்டும் இருக்கும் சீட்டில் கந்தசாமி முதலியார் எவ்வளவு பணம் போடுவார் என்று எனக்குப் புரியவில்லை. (சிரிப்பு.) ஏனென்றால், நமக்கு ஒரு சீட்டு போடுவது என்றால், அது நிரந்தரமாக நடக்கும், பாதுகாப்பு இருக்கிறது என்ற நம்பிக்கை இருந்தால்தான் யாரும் பணம் போடுவார்கள். ஆக அந்த நம்பிக்கை ஏற்பட ஒரு தொகை ஜாமீன் கொடுக்க வேண்டும் என்று சொல்லுகிறோம். மிகக் குறைவான தொகையாக வைத்தால், அதில் பணம் போடுகிறவர்களுக்கு நம்பிக்கை குறையும். சட்டமுறைகள் நன்றாக அமைய, நாடு அதிகமாக

முன்னேறும் துறைகளில் நடைமுறைக்கு ஒப்பாக, சமுதாய வளர்ச்சிக்கு ஒப்பாக, சட்ட வளர்ச்சிக்கு ஒப்பாக இருக்கவேண்டுமானுல் நல்ல அளவுக்கு ஜாமீன் கொடுக்கச் செய்யவேண்டும்., பண்டை காலத்தில் யார் யார் கிராமத்தில் இருந்தார்களோ அவர்கள் ஒருவரையொருவர் நம்பி, அவர்கள் கிராமத்தைவிட்டு வெளியில் போகாமல், தெரியாமல் இருந்த காலத்தில், சீட்டுகள் 10 பேர் அல்லது 20, 30, 50 பேர்கள் சேர்ந்துகொண்டு, ஒரு மனிதனுடைய நம்பிக்கையின் பேரில், அம்மாதிரிச் செய்திருக்கலாம். அம்மாதிரி இன்று பாங்கிங் நடத்த முடியுமா ? பண்டை காலத்தில் பாங்கிங்கூட அப்படித்தான் நடந்தது. பெருமையாகத்தான் சொல்கிறேன். ஒரு ஊரில் பெரிய செட்டியார் இருப்பார். அவரிடத்தில் ஊர் மக்களெல்லாம் டெபாஸிட் செய்வார்கள். அவர்களுக்கு வேண்டுகிறபொழுது பணம் கிடைக்கும். பாங்க் மாதிரியே நடத்திக் கொண்டிருந்தார்கள் முன் காலத்தில். இன்றைக்கு அந்த மாதிரி யாராவது பாங்க் நடத்த முடியுமா ? நடத்தவேண்டுமென்று சொல்வோமா ? அதுபோல்தான், சிட் பண்டும், இதற்கு முன் சிறு சிறு சமூகங்களாக கிராமங்களில் பரவியிருந்த காரணத்தால் ஒரு முறையில் செய்யப்பட்டு வந்தது. இன்றைக்கு வளர்ந்து வரும் சமுதாயத்தில், அதிலும் முக்கியமாக வியாபாரத் துறையில் சீட்டு வைத்துக்கொண்டு, அதன் மூலமாக வியாபாரம் செய்ய வேண்டியிருக்கும் நிலைமை ஏற்படும்போது, அதற்கு அந்தப் பழைய முறை போதாது. அதற்காகத்தான் இன்றைக்கு ஏதாவது ஒரு நல்ல முறையிலே, நவீன முறையிலே அதைத் திருத்தியமைக்கவேண்டும் என்பதற்காக ஜாமீன் தொகை வேண்டுமென்று தீர்மானம் செய்தோம்.

இந்த ஜாமீன் தொகை எவ்வளவு இருக்கவேண்டும் என்பதில், சர்க்கார் ஏதோ மத்தியஸ்தம் மாதிரி 50 சத விகிதம் என்பதை ஒத்துக்கொண்டார்கள். மிகக் குறைவாக செக்யூரிடி ஜாமீன் கேட்கவேண்டுமென்ற அபிப்பிராயம் ஒரு புறத்தில் இருக்கிறது. கனம் அங்கத்தினர் திரு. ராமசாமி அவர்கள் சொன்னதுபோல், முழு ஜாமீன் கொடுக்காவிட்டால் போதாது என்ற அபிப்பிராயமும் இருக்கிறது. ஆகவே, இதை ஒரு மத்தியஸ்தமாக, 50 சத விகிதம் ரொக்கமாகக் கொடுத்தால் போதும், சொத்து ஜாமீனுக இருந்தால் 100 சத விகிதம் கொடுக்கவேண்டும் என்ற தீர்மானத்தை நாம் செய்தோம். ஆகையால்தான், இது எல்லோருக்கும் பொதுவாக இருக்கும் முடிவானதால் அதையும் ஏற்றுக் கொள்ளும்படியாக நான் கேட்டுக் கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. ராமசாமி அவர்கள், 'ஏன் இதை ஒவ்வொரு ஜில்லாவுக்கும் அரசாங்கம் குறிப்பிடுகிற சமயத்தில் அமுல் செய்யலாம் என்று கொண்டுவர வேண்டும்? எல்லா ஜில்லாக்களுக்கும் ஒரே சமயத்தில் கொண்டுவரலாம் என்று ஏன் குறிப்பிடவில்லை ?' என்று சொன்னுர்கள். இந்தச் சட்டத்தை நாம் புதிதாகக் கொண்டுவருகிறோம். அதனுல், சர்க்காருடைய அபிப்பிராயம், ஜில்லா ஜில்லாவாக அதற்கு வேண்டிய

[31st January 1961] [Sri R. Venkataraman]

'ஆர்கனேஸேஷன்' செய்துகொண்டு போகலாம் என்பதுதான் இதற்கு ரிஜிஸ்திரார் நியமிக்கவேண்டும், விதிகளின்படி நடப்பதற்கு உத்தியோகஸ்தர்கள் வேண்டும். உடனடியாக ராஜ்யம் பூராவும் அமுல் செய்வதற்குப் பதிலாக, இப்பொழுது வெகு சுலபமாகக் கன்யாகுமரி ஜில்லாவிலே கொண்டுவந்துவிடலாம். அதற்குப் புதிதாகச் செய்ய வேண்டிய காரியம் ஒன்றுமே இல்லை. அடுத்தாற்போல், ஓரளவு திருநெல்வேலி ஜில்லாவிலே கொண்டுவந்துவிடலாம். ஏனென்ருல், பக்கத்து ஜில்லாவாகிய கன்யாகுமரி ஜில்லாவில் சட்டம் என்ன முறையில் நடக்கின்றது என்பது அவர்களுக்குத் தெரிந்திருக்கும். ஆகையால்தான், ஜில்லா ஜில்லாவாக, எப்படி அவசியமோ அப்படிக் கொண்டுவர வேண்டும், படிப்படியாகக் கொண்டுவரவேண்டும் என்று போட்டிருக்கிரும். சர்க்கார், சில ஜில்லாக்களுக்கு மட்டும் இந்தச் சட்டம் இருக்கவேண்டும், மற்ற ஜில்லாக்களுக்கு இந்தச் சட்டம் இருக்கக்கூடாது என்ற நோக்கத்துடன் செய்யவில்லை என்பதை மிகத் திட்டவட்டமாக நான் சட்டசபையிலே கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஷரத்தைப் படிக்கும் நேரத்தில் ஒருவேளை அந்தப் பயம், அந்தச் சந்தேகம் சிலருக்கு எழக்கூடும். அந்தச் சந்தேகத்திற்கு இடமே இல்லை, சர்க்காருடைய நோக்கம் அது அல்ல என்பதை நான் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆடிட் செய்வதைப்பற்றிப் பெரிய பிரச்சினை இருந்தது. முதலில் மசோதா கொண்டுவந்த நேரத்தில், சர்க்கார் ஆடிட்டரேதான் ஆடிட் செய்யவேண்டுமென்று குறிப்பிட்டிருந்தோம். சர்க்கார் ஆடிட்டர் ஆடிட் செய்வதிலே எத்தனையோ கஷ்டங்கள் இருக்கின்றன. காலதாமதம் ஆகிறது. ஆகையால்தான், தனியார் ஆடிட் செய்ய முடியும் என்று எப்படி கம்பெனி சட்டத்தில் போட்டிருக்கிருமா, அதேபோல், திருத்தி, இந்தியன் கம்பெனீஸ் ஆக்ட் பிரகாரம் ஆடிட்டர்களாக இருக்கக் கூடியவர்கள் ஆடிட் செய்யலாம் என்ற முறையை ஏற்றுக்கொண்டோம்.

'ஸப்ஸ்க்ரைபர்'-களுக்குப் பாதுகாப்பு கொடுக்கவேண்டியதற்காக அவர்கள் ரிகார்டுகளைப் பரிசீலனை செய்யலாம் என்ற ஷரத்தைச் சேர்த்தோம். ரிகார்டுகளைப் பரிசீலனை செய்யும்போது, அதற்குக் கட்டணம் கட்டவேண்டும்; இல்லாவிட்டால் ஒவ்வொரு ஸப்ஸ்க்ரைபரும் திடீர் திடீர் என்று ஆபீசிற்குள் வந்து பரிசீலனை செய்ய ஆரம்பித்துவிட்டால், போர்மெனுக்கு வேறு எந்த வேலையும் செய்ய முடியாமல் போகும், தொல்லை ஏற்படும். அல்லது, ரிகார்டுகளைப் பரிசீலனை செய்ய வேண்டாம் என்று சொல்லிவிட்டாலும், என்ன எழுதியிருக்கிருர்கள் என்று தெரியாமல் போய்விடக் கூடும். ரிகார்டுகளைப் பரிசீலனை செய்யவேண்டும். கம்பெனி சட்டத்தின்கீழ் எப்படி ஒரு தொகை கட்டி ரிகார்டுகளைப் பரிசீலனை செய்யலாம் என்று இருக்கிறதோ அதே மாதிரி இதிலும் குறிப்பிட்டிருக்கிருேம்.

[Sri R. Venkataraman] [31st January 1961]

ஆனால், ஐந்து ரூபாய் கட்டித்தான் பரிசீலனை செய்யவேண்டு மென்று சட்டம் இல்லை. 35-வது ஷரத்திலே பார்த்தால், ஐந்து ரூபாய்க்கு மேற்படாமல், என்ன தொகை சிட் அக்ரிமென்டில் குறிப்பிட்டிருக்கிறதோ அந்தத் தொகையைக் கட்டி இன்ஸ் பெக்ஷன் செய்யலாம் என்று குறிப்பிட்டிருப்பது தெரியும்.

"Every foreman shall, on payment of such fee not exceeding five rupees as may be specified in the chit agreement. . . . . . . ."

என்று இருக்கிறபடியால், சிட் அக்ரிமென்டில் போட்டாக வேண்டும். ரிகார்டைப் பார்க்க ஐந்து ரூபாய் கொடுத்தாகவேண்டு மென்று சிட் அக்ரிமென்டில் இருக்குமானால், அதைப் பார்த்து ஜனங்களே சந்தேகப்படுவர். தம்முடைய ரிகார்டைப் பார்க்க ஐந்து ரூபாய் கொடுக்கவேண்டுமென்று அக்ரிமென்டில் இருக்கிற தென்றால், இவர்கள் நடத்தும் இந்தவிதமான சிட் பண்டிலே சேர லாமா என்ற சந்தேகம் வந்துவிடும். குறைவாக, ஒரு ரூபாய் அளவுக்குப் போடுவது வழக்கம். அம்மாதிரி போட்டு இன்ஸ்பெக்ஷன் செய்யலாம் என்று இருந்தால் நம்பிக்கை கொடுக்கும், ஸப்ஸ்க்ரைபர்ஸ் அதைக் கட்டி, ரிகார்டுகளைப் பார்த்துக்கொள்வதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். சட்டத்தில் ஐந்து ரூபாய் என்று அதிகமாகப் போட்டுவிட்டோம் என்ற நிலைமை இல்லை. ஐந்து ரூபாய்க்கு மேற்படாமல் என்ன தொகை சிட் அக்ரிமென்டில் குறிப்பிட்டிருக்கிறதோ அதைத்தான் கட்ட வேண்டும் என்று சொல்லியிருக்கிறோம்.

கனம் அங்கத்தினர் திரு. மாணிக்கசுந்தரம் அவர்கள், ரிகார்டுகள் எல்லாவற்றையும் 12 வருஷ காலம் வைத்துக்கொள்ள வேண்டுமா என்ற பிரச்னையை எழுப்பினார்கள். பன்னிரண்டு வருஷ காலம் என்பது சற்று அதிகமாகத்தான் இருக்கிறது. 36-வது பிரிவில் பார்த்தால் 12 வருஷ காலம் வைத்திருக்கவேண்டும் என்று போட்டிருக்கிறோம். அதற்குக் காரணம் என்னவென்றால், சொத்து ஜாமீன் ஒருவர் கொடுப்பாரானால், 'இம்மூவபிள் ப்ராபர்டி' சம்பந்தமான வில்லங்கம் எல்லாவற்றுக்கும் 12 வருஷ காலம் தேவையாக இருக்கும் காரணத்தால் 12 வருஷம் என்று போட்டோம். ஷரத்துவாரியாக எடுத்துக்கொள்ளும்போது ஓரளவு இதுபற்றி பரிசீலனை செய்யத் தயாராயிருக்கிறேன். சிட்டு முடிவடைந்து, அதற்கு மேல் மூன்று வருஷம் வரையிலும் ரிகார்டு வைத்துக்கொண்டிருந்தால் போதும் என்ற ஒரு அபிப்பிராயம் கூறப்படுகிறது. அதைச் சர்க்கார் பரிசீலனை செய்யும். ஷரத்துவாரி விவாதம் வரும்போது யோசனை செய்கிறோம் என்று தெரிவித்துக் கொள்கின்றேன். பன்னிரண்டு வருஷ காலம் ரிகார்டு வைத்துக் கொள்ளவேண்டும் என்றால் அதில் கஷ்டம் இருக்கிறது. சீட்டு முடிந்த பிறகு மூன்று வருஷங்களுக்குள் எந்தவிதமான 'க்ளெயிம்' இருந்தாலும் வந்துவிடும். அதற்குமேல் வரவில்லை யென்றால், ஸப்ஸ்க்ரைபருடைய தவறாகத்தான் அதை நாம் கருத வேண்டும். ஆகையால், இதைத் திரும்ப ஆலோசனை செய்வ தற்குச் சர்க்கார் தயாராயிருக்கிறது என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

31st January 1961] [Sri R. Venkataraman]

57-வது பிரிவில் 'ஸாலரீட் மாஜிஸ்ட்ரேட்' என்று போட்டிருக்கிறது. அது புதிதாக இருக்கிறது என்று கனம் அங்கத்தினர் திரு. மாணிக்கசுந்தரம் அவர்கள் சொன்னார்கள். அது உண்மை தான். இதுவரை அம்மாதிரி போடவில்லை. என்றாலும், இப்பொழுது போடுவதற்குக் காரணம் என்னவென்றால், **first** க்ளாஸ் மாஜிஸ்ட்ரேட்தான் இந்த கேஸை விசாரிக்கவேண்டுமென்றால், தாலூகா ஹெட்க்வார்ட்டசுக்கு மேலே போகவேண்டிய நிலைமை ஏற்படும். செகண்டு க்ளாஸ் மாஜிஸ்ட்ரேட் என்றால், ஆனரரி மாஜிஸ்ட்ரேட்கூட இதை விசாரிக்கும்படியான நிலைமை ஏற்பட்டுவிடும். ஆனரரி மாஜிஸ்ட்ரேட் சட்டத்தில் பயிற்சி பெறாதவர்கள். ஆதலால், பொதுவாக **facts** சம்பந்தமாகத் தீர்ப்புக் கொடுப்பவர்களாக இருப்பதால், நாம் இதை 'ஸாலரீட் மாஜிஸ்ட்ரேட்' என்று போட்டோம். அவர்களைச் சட்டம் படித்தவர்களாகத்தான் நம்முடைய ராஜ்யத்தில் அமைத்திருக்கிறோம். ஆகையால், புதிதாக அதைப் போட்டிருக்கிறோம். இதனால் தவறு ஏற்பட்டுவிடும் என்று நினைக்கவில்லை. நமக்குப் புதிது புதிதாக நிலைமை ஏற்படும்போது, சூழ்நிலை உண்டாகும் போது, அதற்குப் புதிது புதிதாகச் சட்டங்களை அமைக்க வேண்டியதுதான். அதற்கு வேண்டிய புதியதான வார்த்தைகளை உபயோகிக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது. சர்க்காரால் நியமிக்கப்பட்ட பர்மெனென்ட் உத்தியோகஸ்தர்களாக இருக்கக் கூடிய அவர்தான் விசாரிக்கவேண்டும். ஆனரரி மாஜிஸ்ட்ரேட் போன்றவர்கள் இதை விசாரிக்கத் தேவையில்லை என்பதற்காக அந்தவிதமாக ஷரத்து போடப்பட்டிருக்கிறது.

பொதுவாக இந்த மசோதா எல்லோராலும் வரவேற்கப்பட்டிருக்கிறது. இதை நடத்துகிறவர்கள்கூட, இன்னும் இதைத் தளர்த்தினால் தேவலை என்ற வார்த்தையைத் தெரிவித்தார்களே தவிர, ஏதோ அவர்களுக்கு மிகவும் பாதகத்தை விளைவித்துவிட்டது, தொழில் நசித்துவிடும் என்ற அபிப்பிராயம் சொல்லவில்லை. இந்தச் சட்டம் மிகவும் அவசியம். இது நம்முடைய வளர்ச்சிக்கே உபயோகமாக இருக்குமென்று நம்புகிறேன். ஆகவே இதை ஏற்றுக்கொள்ளும்படியாக நான் கேட்டுக்கொள்கின்றேன்.

MR. SPEAKER : The question is—

'That the Madras Chit Funds Bill, 1960 (L.A. Bill No. 5 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration.'

**The motion was put and carried and the Bill as amended by the Joint Select Committee was taken into consideration.**

*Clause 2.*

MR. SPEAKER : The motion is—

'That clause 2 do stand part of the Bill.'

**Now, the hon. Members may move their amendments. Every amendment should be moved and should be seconded. Now, the hon. Member, Sri T. Sampath will move his amendments.**

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

'In difinition (2) omit the words " a number of ".

SRI S. LAZAR : I second the amendment.

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

'In definition 2 omit the " Explanation to the definition.'

SRI V. S. MANICKASUNDARAM : I second the emendment.

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

'In definition (3), for the words " a document " substitute the words " the document or documents or copies thereof.".

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI S. LAZAR : Sir, I move the following amendment—

'In definition (5), for the word " subscriptions " substitute the word " subscription."

SRI T. SAMPATH : I second the amendment.

SRI S. LAZAR : Sir, I move the following amendment—

'For definition (6) substitute the following :—

" (6) 'discount' means the difference betwen the chit amount and the prize amount ".

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI T. SAMPATH : Sir, I move the folowing amendment—

'In definition (5), for the word " subscriptions " substitute the words " one or more instalments of subscription " or the word "subscription."

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

'In definition (8), for the word " at ", substitute the words " in respect of."

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

'In definition (9), for the words " a firm " substitute the words " a partnership " *and* after the words " (Central Act IX of 1932) ", *add* the words " or a company registered under the Indian Companies Act I of 1956 or the Banking Companies Act IX of 1949 ".'

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI S. LAZAR : Sir, I move the following amendment—

'In definition (10) delete the proviso.'

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

31st January 1961]

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

" Omit definition (12) "

*or*

for the definition, *substitute* the following—

" Non-prized subscriber " means a subscriber to a chit who is not entitled to a prize but does not include a defaulting subscriber."

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI S. LAZAR : Sir, I move the following amendment.—

" In definition (12), for the word " subscription " substitute the word " any subscription."

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI T. SAMPATH : Sir, I move the following amendment—

' In definition (13), for the words " the difference between the chit amount and the discount proportionate to the fraction of the ticket, substitute the words " the difference between the share of chit amount and the share of the discount proportionate to the fraction of the ticket." '

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

SRI S. LAZAR : Sir, I move the following amendment—

For sub-class (13), substitute the following—

" (13) ' Prize amount ' means the amount as determined at each instalment by auction or by tender or in such other manner as may be provided for in the agreement, and in the case of fraction of a ticket, means the amount so determined and proportionate to the fraction of the ticket; and when the prize amount is payable otherwise than in cash, the value of the prize amount shall be the value at the time it becomes payable.

SRI V. S. MANIKKASUNDARAM : I second the amendment.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

Now Sri T. Sampath can speak on the amendments.

SRI T. SAMPATH : I want to omit the words " number of ", without these words the clause will read better viz ' agreement with subscribers '.

Instead of the word ' documents ' it is better that documents of all categories are taken into consideration. Therefore I have suggested the substitution of the words " the document or documents or copies thereof." for the word ' a document '.

The defaulting subscribers mean, subscribers who have delayed payment of subscription due according to the terms of agreement of chit fund. I feel that the words " one or more instalments of subscription " would be better. I have, therefore moved an amendment to that effect.

[Sri T. Sampath] [31st January 1961

'Drawing' means ascertaining of the person or persons entitled to the prize amount at any instalment of a chit. I wish that instead of the word 'at' the words 'in respect of' be substituted.

'Non-prized subscriber' means, the explanation reads like this—

'Non-prized subscriber' does not include a subscriber who has defaulted in the payment of subscriptions due according to the terms of the chit agreement. I have suggested, Sir, 'non-prized subscriber' means a subscriber to a chit who is not entitled to a prize but does not include a defaulting subscriber. I want to remove the 'defaulting subscriber' from the purview of the definition.

(Deputy Speaker in the Chair.)

For the words, 'the difference between the chit amount and the discount, and, in the case of a fraction of a ticket,' I have suggested the substitution of words "the difference between the share of chit amount and the share of the discount proportionate to the fraction of the ticket."

These are only technical amendments seeking to amend the language.

SRI S. LAZAR: Sir, before going to my own amendments, I would like to speak on Sri T. Sampath's amendment regarding the explanation and the illustration to the definition to be deleted. As the Hon. Minister has rightly pointed out it would only go to show that only certain chits are sought to be exempted and other kinds of chit transactions are to be brought under the purview of the enactment. In order that the other amendments might also be correctly understood, I would like to illustrate how the chit transactions normally take place. For example, 10 persons join together and decide to have a chit transaction and each subscribes Rs. 100, then the chit amount will be Rs. 1,000. The first instalment of subscription is paid by the Members to the foreman, as we call him, and the date is fixed for auction. What happens on the date fixed is that the subscribers or their agents, they join together, gather at a particular place and the auction is conducted or given by tender. The lowest tender is of the value of Rs. 100 If amongst the subscribers anyone bids as high as for Rs. 300 he will get Rs. 700 of the chit amount. If this transaction is borne in mind it will also be seen that the balance of Rs. 300 would be paid to subscribers as dividend and also commission that is taken by he foreman. It is not as though in every case this commission is being taken by the foreman. As the Hon. Minister rightly pointed out there are also transactions in the villages and in towns, where people join together just like a Co-operative Society, decide to run a chit fund and for that purpose they have some transaction. So far as these people are concerned there is no object in making any profit out of it by way of commission and whatever the difference is between the chit amount and the prize amount, it

is being distributed amongst all the subscribers. So the benefit goes equally to all the subscribers so far as this kind of chit transactions are concerned. I do not see why we should enact for this transaction.

Fradulent transaction take place only in cases where the foreman runs the business for the purpose of making a huge profit out of this chit transaction and for his sole benefit without equally sharing the benefits with the other subscribers. As the Hon. Minister pointed out, if for instance, a foreman happens to take all the money and runs away with it or if the other subscribers are not able to find out what exactly is obtaining, it may cause some hardship to them. Therefore, it is necessary that accounts should be maintained and they should get registered their transactions before the Registrar on all these matters. It is also not known wherefrom the foreman will pay, the payment towards registration of bye-laws, the payment to be paid for the purpose of filing agreement, and depositing the amount. All these things will involve some expenditure and who is to pay this expenditure. He, for himself, does not take any amount from the discount, i.e., difference between the prize amount and the chit amount. Therefore, I suggest that in so far as foreman is not benefitted and in so far as under this enactment he is made to incur certain expenditure, it is not correct to put this burden on the foreman, if he does voluntarily without fixing any premium for the service he renders. Therefore, I suggest that such transactions should be taken away from the purview of the enactment. Reading the definition as it is so far 12-00 noon as sub-clause (2) is concerned, it is clearly shown that only in cases where the entire chit amount is being taken by one subscriber after another, it will be an exemption. That is quite apparent from the definition itself. With that idea only, hon. Member Sri Sampath has given his amendment. There is absolutely no necessity for this Explanation, or Illustration. These are quite clear and they emerge from the definition which is already found under the term ' chit '. Apart from this, on reading the various definitions in this clause one is led to think that the discount has got to be fixed by agreement. It is not so. On the other hand, discount represents the difference between the prize amount and the chit amount. The varying factor is only the prize amount. Neither the chit amount nor the discount is a varying factor. The prize amount alone varies and is paid to the person who bids the lowest. Therefore, if the definition is to be understood properly, we have to make the position clear. The definition has to be complete by itself and we should not leave it vague. Under sub-clause (2) it is stated, ' . . . that each subscriber in his turn, as determined by lot or by auction or in such other manner as may be provided for in the agreement, shall be entitled to a prize amount.' This should be made absolutely clear in the definition relating to the term ' prize amount ' also. That is why I have stated in my amendment that ' prize amount ' should mean the amount as determined at each instalment by auction or by tender or in such other manner as may be provided for in the agreement . . . ' The definition should be clear, complete

by itself and should not throw any suspicion or misunderstanding. Therefore it is I say that the Explanation and Illustration are not at all necessary. As rightly pointed out by the Hon. Minister, the first Explanation will only be a lottery transaction so to say which is punishable under the provisions of the Indian Penal Code. Therefore, I do not think there is any need for including these things under the word ' chit '.

Next I come to my amendment to sub-clause (5). It is similar to the one moved by hon. Member Sri Sampath. The plural ' subscriptions ' is quite unnecessary and does not make any meaning. I am sure the Hon. Minister is quite aware that the singular of any expression in law includes plural also. Man includes men and women. Applying that principle under the General Clauses Act, there is no need for our saying here ' subscriptions ' and it is quite enough if we say ' subscription '. Even if there was a default of more than one subscription, it was a default. It does not matter even if there were a number of times in which subscriptions had not been paid. It was a default as such, no matter the number of times there were defaults. So, we need not say ' subscriptions ' here.

I have also suggested that the definition under sub-clause (6) should be changed as follows: ' discount ' means the difference between the chit amount and the prize amount.' Discount is a factor which represents the difference between the prize amount and the chit amount. In the definition, it is stated 'discount ' means the sum or the quantity of grain, which a prized subscriber has under the terms of the chit agreement to forego . . . ' I do not see how he has to forego. It is his own agreement. When he bids, he agrees to have that amount. So, it follows from the bid and not from the agreement. It is also stated in the definition, ' . . . and which is set apart under the said agreement.' I do not know in which chit transaction, it has been forethought and provided for in the agreement. They could make provision for commission or any remuneration to which he may be entitled, but not for the discount. Discount depends upon the prize amount. Therefore, this part of the definition will not give any sense when it says ' . . and which is set apart under the said agreement . . .' I can understand if it refers to expenses of running the chit which may include commission and other necessary expenses that may be incurred. But we cannot determine distribution of dividend among subscribers beforehand.

My next amendment relates to sub-clause (10). Before explaining my amendment, I would like to refer to the amendment moved by hon. Member Sri T. Sampath relating to the definition of the word ' firm ' When we define 'firm', are we not taking into consideration the companies registered under the Indian Companies Act and the Banking Companies Act? They are also running these chit transactions. If it is considered that there is no necessity to so define in this sub-clause as to include these companies also as they

31st January 1961] [Sri S. Lazar]

had already been defined under other enactments, then they must be permitted to run these chit transactions. To that extent, the suggestion made by Sri Sampath may be accepted.

So far as the definition of the word 'foreman' is concerned, I have suggested that the proviso to sub-clause (10) be deleted. The term 'firm' has already been defined under sub-clause (9) as a firm registered under the Indian Partnership Act. If that is the case, then there is no need to repeat the same thing once over, and say in sub-clause (10) also that a firm should be registered under the Indian Partnership Act.

The next amendment of mine relates to sub-clause (12) wherein I have suggested that the word 'subscriptions' should be substituted by the words 'any subscription'. The reason for this amendment is the same as I have given with reference to the other definition under sub-clause (5).

Lastly, I have moved an amendment with regard to the definition of the term 'prize amount' in the light of the illustration I have already given. I have stated in my amendment that the prize amount, means the amount as determined at each instalment by auction or by tender or in such other manner as may be provided for in the agreement . . .' But, the definition as given in the Bill states that the 'prize amount means the difference between the chit amount and the discount . . . This is just putting the cart before the horse. It is only the prize amount which is fixed first by auction and not the discount. Discount follows the prize amount. Therefore 'discount' should be defined as the difference between the chit amount and the prize amount and the 'prize amount' should be defined as the amount as determined at each instalment by auction or by tender or in such other manner as may be provided for in the agreement.' This amendment is quite necessary. These are the various suggestions that I wish to make for the consideration of the House.

SRI V. S. MANIKKASUNDARAM: ஸார், கனம் லாசர் அவர்கள் 57-வது பிரிவிற்குக் கொடுத்திருக்கும் திருத்தத்தின்மீது சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இதில் "ஸாலரீட் மாஜிஸ்ட்ரேட்' என்று போட்டிருப்பது மற்ற "ஆனரரி மாஜிஸ்ட்ரேட்" என்று உபயோகப்படுத்தப்படும் என்று சொன்னார்கள் என்று நினைக்கிறேன். அந்தமாதிரி நாம் பிரிவு காட்ட வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். இது வரை எப்படி அனுஷ்டிக்கப்பட்டு வந்ததோ அதேபோல் அனுஷ்டித்தால் போதும் என்று நம்புகிறேன். 'ஸாலரீட் மாஜிஸ்ட்ரேட்' என்று போட்டால் சில இடங்களில் 'ஆனரரி மாஜிஸ்ட்ரேட்' உட்கார்ந்தால் பல குழப்பங்கள் ஏற்பட வழியிருக்கிறது. இரண்டாவதாக, நாம் புதிதாக ஒரு பதத்தை அதாவது இதுவரையில் அனுஷ்டித்து வந்த முறைகளை அனுஷ்டிக்காமல் புதிய முறையை அனுஷ்டிக்கின்ற முறையில் . . . .

THE HON SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் "ஃபர்ஸ்ட் கிளாஸ் மாஜிஸ்ட்ரேட்" வேண்டுமென்று சொல்லுகிறார்களா என்பதை அறிய வேண்டுகிறேன்.

SRI T. SAMPATH : Sir, I have suggested that he must be a First Class Magistrate.

SRI V. S. MANIKKASUNDARAM : இதில் ஸொலரிட் மாஜிஸ்டிரேட் என்று போட்டிருப்பது ஆனரரி மாஜிஸ்டிரேட் அல்லது பஞ்சாயத் மாஜிஸ்டிரேட் என்பதை குறிப்பதாக சர்க்காருடைய நோக்கம் இராது என்று எண்ணுகிறேன். அப்படியிருந்தால் வேறுவிதமாகப் போடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சாதாரணமாக கிரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்று போட்டால் அதில் வாரன்ட் கேஸ் என்று போட்டு விட்டு சம்மரி பிரோஸிஜர் நடத்தக்கூடாது என்று இருக்கிறது. இந்தமுறையில் இதில் ஒரு ப்ரொவைஸோ சேர்த்து "Provided that this should not go before Honorary Magistrates" என்று போட்டால் நல்லதாக இருக்கும். அதோடு 'ஸாலரீட் மாஜிஸ்டிரேட்' என்று போட்டிருப்பது என்னைப்போன்றவர்களுக்கு 'ஜாரிங் ஸௌன்ட்'-டை ஏற்படுத்துகிறது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI T. SAMPATH : Deputy Speaker, Sir, I am thankful to my hon. Friend, Sri Lazar, for explaining fully the scope of my amendment. He stated that the definition of 'chit' as found in sub-clause (2) is quite all right. I have suggested that the Explanation in the clause can be omitted.

DEPUTY SPEAKER : May I know whether the hon. Member is replying to the points raised by the hon. Member, Sri Lazar?

SRI T. SAMPATH : Sir, my point is that the Explanation is in the negative form and it can be omitted.

DEPUTY SPEAKER : The discussion on this Clause will be continued to-morrow.

The House will now adjourn and meet again tomorrow at 8-30 a.m.

(The House then adjourned.)

## VII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*A Statutory Rules and Orders.*

***Nil.***

*B. Reports, Notifications and other Papers.*

* 47. *Errata to* (1) *The Madras General Sales Tax (Amendment) Bill,* 1961, (2) *The Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill,* 1961, (3) *The Travancore-Cochin Agricultural Income-tax (Madras Amendment) Bill,* 1961, *and* (4) *The Madras Inams (Assessment) Amendment Bill,* **1961.**